
நறுமணம்

# கல்கி பொருளடக்கம்

மலர் 2 இதழ் 16 | 1943 ஜனவரி 1 | சித்ரபானு ஞு மார்கழி 17உ





★

"ஊரைச் சொன்னாலும் பேரைச் சொல்லாதே" என்று சொல்வதுண்டு. ஆனால் ஊரையும் பேரையும் சேர்த்து "மழவராயநேந்தல் சுப்பராம பாகவதர்" என்று நமக்கு அடிக்கடி சொல்லத் தோன்றுகிறது. 'ழ'வெனும் ஓசையுடைய 'மழவராயநேந்தல்' என்னும்போது அமிழ்தினுமினிய தமிழ்மொழியின் இன்பத்தை ஒருவாறு அறிந்து அநுபவித்து மகிழ்கிறோம். இத்தகைய அழகிய பெயருடைய ஊரில் சங்கீத வித்வத் பரம்பரையில் பிறந்த ஸ்ரீ சுப்பராம பாகவதர் அவர்கள் இம்முறை சங்கீத மகாநாட்டில் தலைமை வகித்துத் தமிழ்ப் பெரியார்கள் தமிழ்மொழியில் தேனொழுகப் பாடியிருக்கும் ஆயிரக் கணக்கான சாஹித்யங்களின் பெருமையை அனைவரும் அறிய எடுத்துக் கூறியிருக்கிறார். இத்தகைய "சங்கீத கலாநிதி"யின் படம் "கல்கி"யில் இந்த இதழ் மேலட்டையை அலங்கரிப்பது பொருத்தமேயல்லவா?

★



# நான் என் சருமத்தின் அழகை காப்பாற்றுவது போல, நீங்களும் செய்யுங்கள்

## "லக்ஸ் டாய்லெட் சோப்பினால் இது மிக சுலபம்" என்றார் மும்தாஸ் சாந்தி




"இப்பொழுது சினிமா உலகில் வெற்றி பெற்று கீர்த்தி வாய்ந்த நடன மாது மும்தாஸ் சாந்தி "நான் செய்வதுபோல் செய்" என்று மேலும் கூறுகிறார். லக்ஸ் டாய்லெட் சோப்பை தவறாமல் உபயோகித்தால் உங்களுடைய சருமம் தூய்மையாகவும், இளமையாகவும் இருப்பதைக்கண்டு சந்தோஷிப்பீர்கள்.

LTS. 79-172 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED




# கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்


# என்ன சேதி?

## டார்லான் நாடகம்

இந்த யுத்தம் ஆரம்பித்த பின் எவ்வளவோ ஆச்சரிய சம்பவங்கள் நடந்து விட்டன. ஆனால் வட ஆப்பிரிக்காவின் பிரஞ்சு ஹை கமிஷனர் அட்மிரல் டார்லான் மறைவைப் போன்ற பிரமிப்பு உண்டாக்கும் சம்பவம் இதுவரை நடந்ததில்லை, நடக்கப் போகிறதுமில்லை.

"ஆல்ஜியர்ஸ் நகரில் 20 வயதுள்ள வாலிபனால் டார்லான் தமது ஆபீஸ் அறையிலேயே சுட்டுக் கொல்லப்பட்டார்" என்பதைப் படித்த போது, "அந்தக் கொலைகாரன் யார்?" "டார்லானை எதற்காகக் கொன்றான்?" "யார் தூண்டுதலின் பேரில் கொன்றான்?" என்றெல்லாம் கேள்விகள் எழுந்தன. இக் கேள்விகளுக்குப் பதில் கிடைக்கும் வழியைத்தான் காணோம்.

பிரான்ஸ் சரணாகதி யாகும்போது, அட்மிரல் டார்லான் பிரஞ்சு மந்திரி சபையிலிருந்தார். மார்ஷல் பெடெய்னுடன் சேர்ந்து ஜெர்மனியுடன் மனப்பூர்வமாக ஒத்துழைக்கத் தயாராயிருந்தார். ஹிட்லர் 'வெட்டிக் கொண்டு வா' என்றால், டார்லான் 'கட்டிக் கொண்டுதான் வருவேன்' என்றார். அட்மிரல் டார்லானின் ஆங்கிலேய துவேஷம் பிரசித்தமாக ஆரம்பித்தது.

## அடுத்த அத்தியாயம்

ஆனால் அதே அட்மிரல் டார்லானின் அடுத்த அத்தியாயம் இவ்வளவு விசித்திரமாக இருக்கப் போகிறதென்று யாருக்குத் தெரியும்? அமெரிக்கப் படைகள் கஸபிளாங்காவில் 'திமுதிமு' வென்று இறங்கின. அப்பொழுது ஹை கமிஷனராயிருந்த டார்லானுக்குப் பெடெய்ன் உத்தரவு போட்டார். "அவர்களை உள்ளே விடாதே! அடித்து விரட்டு" என்பதுதான் விஷி சர்க்கார் உத்தரவு. அட்மிரல் டார்லான் அந்த உத்தரவைக் கிழித்துக் குப்பைக்கூடைக்குள் போட்டுவிட்டு, அமெரிக்கத் தளபதியுடன் ஒப்பந்தம் செய்துகொண்டார்.

"என்ன இது? அட்மிரல் டார்லானா நேசநாடுகளுடன் சேர்ந்து கொண்டார்?" என்று உலகம் மூக்கின்மீது விரலை வைத்தது. "ஐயா! அந்தச் சதிகாரரை நம்பாதீர்கள்" என்று அட்மிரல் டார்லானின் விரோதிகளான 'சுதந்திரப் பிரஞ்சுக்காரர்கள்' அலறினார்கள்.

சுதந்திர பிரஞ்சுத் தலைவர் ஜெனரல் டிகாலே எடுத்தார் பேனாவை! ஒரு பிரசங்கம் தயார் செய்து டார்லானை ரேடியோவில் வெளுத்து வாங்கத் தீர்மானித்தார். சர்ச்சில் பாடு ரொம்பத் திண்டாட்டமாகப் போய்விட்டது. அவருக்கு அட்மிரல் டார்லான் ஒத்துழைப்பும் அவசியமாயிருக்கிறது. இத்தனை நாள் தலையில் வைத்துக் கொண்டாடிவிட்டு, இன்று டிகாலேயை அலட்சியம் செய்வதென்றால் எல்லோரும் சிரிப்பார்கள். கடைசியில் தைரியமாகச் சர்ச்சில் டிகாலேயின் ரேடியோ பிரசங்கத்தை நிறுத்தி விட்டார். இது பற்றிப் பார்லிமெண்டிலும் ஏக அமர்க்களப்பட்டது. டார்லான் அந்தஸ்தைப் பற்றிக் கேள்விகள் வந்ததும், "அந்த இழவெல்லாம் நமக்குத் தெரியாது. வட ஆப்பிரிக்காவைப் பற்றின விஷயங்களுக்கெல்லாம் அமெரிக்காவைத்தான் கேட்க வேண்டும்" என்று சொல்லித் தப்பித்துக் கொண்டார்.

## பிரார்த்திக்கிறோம்

"அட்மிரல் டார்லானைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?" என்று ரூஸ்வெல்டைக் கேள்வி மேல் கேள்வி கேட்க ஆரம்பித்தார்கள். "ராணுவ நிலைமையை உத்தேசித்துத்தான் அவருடன் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறோமே தவிர வேறில்லை. யுத்தம் முடிந்த பிறகு பிரான்ஸின் மீது அவர் ஆதிக்கம்

செலுத்தும்படி விட்டு விடுவோமென்று நினைக்காதீர்கள்" என்று பதில் வந்தது.

"நாஜிகளை விட்டு விட்டுத்தான் நேசதேசக் கட்சியில் சேர்ந்தேன்; ஆனால் நம்மைப் பிடித்த சனியன் மட்டும் விடமாட்டேன் என்கிறதே" என்று டார்லான் மனம் குமுறி யிருக்க வேண்டும். "யுத்தம் முடியும்வரை நேச நாடுகளுடன் போர் புரிவதுதான் என் லட்சியம். அதற்குப் பிறகு, பிரான்ஸ் தனக்குப் பிடித்த தலைவரைத் தேர்ந்தெடுக்க விட்டு நான் சந்நியாசம் வாங்கிக் கொள்ளப் போகிறேன்" என்று விரக்தியுடன் பேசினார்.

இந்த ஸ்வாரஸ்யமான கட்டத்தில் தான் டார்லான் நாடகத்திற்கு 'டக்' கென்று திரை போடப்பட்டது. அல்ஜியர்ஸில் அவர் சுட்டுக் கொல்லப்பட்டார் என்ற செய்தி வந்தது.

டார்லானைக் கொன்றவன் யார்? எதற்காகக் கொன்றான்? அதுதான் இன்னும் தெரியவில்லை.

யுத்தம் முடிந்த பிறகு எவ்வளவோ மர்மங்கள் வெளியாகப் போகின்றன என்பதில் சந்தேகமில்லை. டார்லான் படுகொலையின் மர்மமும் அப்போது வெளியாகலாம். அதைத் தெரிந்து கொள்வதற்காகவாவது, நாம் ஜப்பான் குண்டுக்கு இரையாகாமல் உயிர் தப்பிப் பிழைத்திருக்க வேண்டுமென்று பகவானைப் பிரார்த்திக்கிறோம்.

## வருந்துகிறோம் ●

சென்ற "கல்கி" இதழில் 'அக்பர் வருகிறார்' என்ற நாடகத்தை எழுதிய போது, அக்பர் ஸர் சிக்கந்தரையும் தம்முடன் கூட அழைத்துக் கொண்டு போவார் என்று நாம் கொஞ்சமும் எதிர் பார்க்கவில்லை. ஸர் சிக்கந்தர் தீர்க்காயுசாக இருந்து இன்னும் பல ஆண்டுகள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குத் தொண்டு செய்து கொண்டிருப்பார் என்றுதான் நினைத்தோம். ஆனால் நம்மையும் அவரது உற்றார் உறவினரையும் ஏமாற்றிவிட்டு ஸர் சிக்கந்தர் மறைந்து விட்டார்.

ஸர் சிக்கந்தர் ஹயத்கான் மறைவால் பஞ்சாபுக்குப் பெருத்த நஷ்டம்; அதைவிட பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு ரொம்ப ரொம்ப நஷ்டம். எல்லோராலும் விரும்பப்பட்ட இவ்வளவு நல்ல மனுஷரின் மறைவினால் நமக்குக்கூட நஷ்டந்தான்.

# அபாயத்தை அறியுங்கள்!

நமக்குச் சாதகமான எந்த விஷயத்தையும் சுலபமாக — ஆதாரமில்லாமல்—நாம் நம்பத் தயாராயிருக்கிறோம். நமக்கு விருப்பமில்லாத விஷயத்தின்மேல் அவநம்பிக்கை கொள்கிறோம். நமக்குப் பிடிக்காத மனிதன் ஒருவன் கன்னியாகுமரியில் இருக்கிறான்: ஆனால் கல்கத்தாவில் விழுந்த குண்டினால் அவன் காயமடைந்தான் என்று யாராவது சொன்னால் அதை உடனே நம்புகிறோம். "அவன் சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் சாகக் கிடக்கிறான்; செத்துப் போய் விட்டான்; இந்த இடத்தில் அவனை இரகசியமாக அடக்கம் செய்து விட்டார்கள்" என்பதையெல்லாம் கூட நம்பத் தயாராயிருப்பவர்கள் உண்டு. இந்த அதிசயத்தையெல்லாம் சென்ற வருஷத்தில் பார்த்தோம். கொட்டருப்புளி மாதிரி உயிரோடிருந்தவர்களையெல்லாம் வதந்தியானது காலை முறித்து, கையை ஒடித்து, ஜெனரல் ஆஸ்பத்திரியில் கொண்டு வந்து சேர்த்து, ஆழக் குழி தோண்டிப் புதைத்து விட்டது! ஆனால் இப்படிப் புதைக்கப்பட்டவர்கள் அடுத்த நாலு நாளைக்குள் அமர்க்களமாய் ஆகாசத்தில் பறந்தார்கள்; ரயிலில் பிரயாணம் செய்தார்கள்; ரேடியோப் பிரசங்கமும் செய்தார்கள்.

இம்மாதிரியே சென்ற வருஷம் ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் இந்தியாவுக்கு வந்திருந்த காலத்தில் ஒரு வதந்தி உலாவிற்று. அது என்னவென்றால், "காங்கிரஸுக்கும் சர்க்காருக்கும் ராஜி ஏற்பட்டு விட்டால், ஜப்பான்காரன் இந்தியாவின்மேல் குண்டு போடுவான்; ராஜி ஏற்படாவிட்டால் குண்டு போட மாட்டான்" என்பதுதான். ஆகவே ராஜி ஏற்படக்கூடாது என்று பிள்ளையாரை வேண்டிக் கொண்டார்கள் சிலர். இந்த மகா மூடத்தனமான நம்பிக்கை ஜப்பானியரின் ரேடியோப் பிரசாரம் மூலமாகத்தான் பரவியிருக்க வேண்டும். ஆனாலும் இதைச் சிலர் நம்பினார்கள். "காங்கிரஸ்—சர்க்கார் ராஜி ஏற்படாவிட்டால், அதன் பலன் என்ன? இந்தியாவில் இங்கிலீஷ்காரர்களின் சர்வாதிகாரந்தானே? இங்கிலீஷ்காரர்களே இந்தியாவை ஆளட்டும் என்று ஜப்பான்காரன் சும்மா இருப்பானா?" என்கிற சர்வ சாதாரண சந்தேகங்கூட அவர்களுக்குத் தோன்றவில்லை.

காங்கிரஸுக்கும் சர்க்காருக்கும் தான் ராஜி ஏற்படவில்லையே? காங்கிரஸ் தலைவர்கள்தான் சிறையில் இருக்கிறார்களே? பின் ஏன் ஜப்பான்காரன் கல்கத்தாவில் குண்டு போடுகிறான்? ஏன் தினந்தினம் போடுகிறான்? முதலிலெல்லாம் கல்கத்தாவின் வெளிப் புறங்களில் குண்டு விழுந்தது. "சேதமே இல்லை" என்றார்கள். இப்போது "ஜனங்கள் வசிக்கும் இடத்திலும் குண்டு விழுந்தது; சொற்ப சேதம்" என்கிறார்கள்.

"கல்கத்தாவில் பீதியேயில்லை; ஒருவரும் வெளியே கிளம்பவில்லை" என்று லக்னௌவில் இந்திய நிர்வாக சபை அங்கத்தினர் ஒருவர் கூறினார். "அவர் கூறுவது பைத்தியக்காரத்தனம். கல்கத்தாவிலிருந்து ஜனங்கள் போய்க் கொண்டுதானிருக்கிறார்கள்" என்று கல்கத்தா பத்திரிகைகள் எழுதுகின்றன.

கல்கத்தாவில் ஜப்பான்காரன் எதற்காகக் குண்டு போடுகிறான்? "குண்டு ஸ்டாக் அதிகமாயிருக்கிறதே! கல்கத்தாவிலும் நாலு குண்டு போட்டு வைப்போம்!" என்றா? ஒரு நாளும் இல்லை. வெடி குண்டுகளையும், ஆகாச விமானங்களுக்குச் செலவாகும் பெட்ரோலையும் ஜப்பான்காரன் ஒரு நாளும் வீணாக்க மாட்டான். குறிப்பிட்ட ஒரு நோக்கமில்லாமல் போட மாட்டான். இந்த யுத்தத்தில் ஈடுபட்ட எந்த தேசமும் மனித உயிர்களை வீணாக்கினாலும் வீணாக்குமேயன்றிக் குண்டுகளையும் பெட்ரோலையும் வீணாக்காது! ஏனெனில், இந்த நவீன யுத்த முறையில், மனிதர்களைக் காட்டிலும் குண்டுகளும் பெட்ரோலுந்தான் அதிக முக்கியமானவை.

ஆகவே, குண்டுகளை எங்கே, எதற்காகப் போடுவார்கள்? ஒன்று, ஓரிடத்தில் பலமான யுத்த முஸ்தீப்புகள்—யுத்தத் தொழில்கள் நடப்பதாயிருந்தால், அவற்றை அழிப்பதற்காகப் போடுவார்கள். அல்லது படையெடுப்புக்குப் பூர்வாங்கமாகக் குண்டு போடுவார்கள். இந்த இரண்டில் ஒரு நோக்கமில்லாமல் நிச்சயமாகக் குண்டுகளை வீணாக்க மாட்டார்கள். சாதாரண ஜனங்கள்மேல்—பல்லுப்போன பாட்டிமார்கள், பச்சைக் குழந்தைகள், க்ஷய ரோகிகள் முதலியோர்மேல் — குண்டு

போட்டுக் கொல்லுவதில் யுத்த லாபம் எதுவுமே கிடையாது.

எனவே, கல்கத்தாவில் இப்போது குண்டுபோடுவது ஒரு பூர்வாங்க வேலை யென்றுதான் கொள்ள வேண்டும். வங்காளத்தில் ஜப்பானியர் படையெடுக்க முயற்சிப்பார்கள் என்று நம்புவதற்கு 100க்கு 90 பங்கு ஆதாரமிருக்கிறது.

இதோடு, ஜெனரல் டோஜோவின் பேச்சையும் சேர்த்துப் பார்க்க வேண்டும். "இப்போதுதான் நிஜமான யுத்தம் ஆரம்பிக்கப் போகிறது!" என்று டோஜோ சென்ற வாரத்தில் பேசியிருக்கிறார். இதன் பொருள் என்ன? நாளது வரையில் ஜப்பானியர் சுலபமாகவே ஜயமடைந்து வந்திருக்கிறார்கள். உயிர்ச்சேதமோ, ஆயுதச் சேதமோ, பிரமாதமாக அவர்கள் அடைந்து விடவில்லை. அவர்கள் பூரண பலத்தையும் காட்டும்படியான சந்தர்ப்பமே ஏற்படவில்லை. "இதோ ஆரம்பமாகிற இந்திய யுத்தத்தில் தான் அந்த சந்தர்ப்பம் வரப்போகிறது; பூரண பலத்துடன் சண்டையிடப் போகிறோம்" என்று ஜெனரல் டோஜோவின் கூற்றுக்குப் பொருள் கொள்ளலாமல்லவா?

இந்த யுத்தத்தில் நேசக் கட்சியாரின் ஜீவஸ்தானங்களில் ஒன்றாக இந்தியா இருந்து வருகிறது. ஆள்பலமும், தளவாட பலமும் அளவில்லாமல், முடிவில்லாமல், இந்தியாவிலிருந்து நேசக் கட்சிக்குக் கிடைத்துக் கொண்டிருக்கும். இத்தகைய இந்தியா தேசம் பிரிட்டிஷ்காரனிடமே இருக்கட்டுமென்று ஜப்பானியர் ஒரு நாளும் சும்மா இருக்க மாட்டார்கள். இந்தியாவைக் கைப்பற்றத் தங்கள் பூரண பலத்தையும் உபயோகிக்கவே பார்ப்பார்கள். எதிர்பாராத சம்பவம் ஏதாவது நடந்தால்தான் ஜப்பான் படையெடுப்புத் தடைப்படும். அதாவது ஜப்பானில் திடீரென்று பூகம்பம் தோன்றி அந்தத் தீவு அழியவேண்டும். அல்லது ஜப்பானுடைய கப்பல் படை புயலில் அடிபட்டுக் கடலில் முழுக வேண்டும். இப்படி ஏதாவது நேர்ந்தால் அல்லாமல், ஜப்பானியர் இந்தியாவைத் தாக்குவது, இரண்டும் இரண்டும் நாலு என்பது எவ்வளவு நிச்சயமோ, அவ்வளவு நிச்சயமான விஷயம்.

அப்படி ஜப்பான் படையெடுப்பு ஏற்படுமானால், அதை எதிர்த்துச் சமாளிக்க இந்தியாவில் நாம் பூரண ஆயத்தத்துடன் இருக்கிறோமா?

சென்ற இதழில் தளபதி வேவலைப் பற்றி எழுதிய குறிப்பில், "ஜப்பான்காரன் பொல்லாதவன்; அவனுடைய தோல்வியைக்கூட நாம் நம்பக்கூடாது: ஜப்பானை எதிர்க்க நம்முடைய ஆயத்தங்களைத் தான் நம்பவேண்டும்" என்று எழுதியிருந்தோம். இதன் உண்மை மறு நாளே வெளியாயிற்று. கல்கத்தாவில் ஜப்பான் விமானத் தாக்குதல் ஏற்பட்டது.

அதே எச்சரிக்கையைத் தான் இப்போதும் வற்புறுத்துகிறோம். "அபாயத்தை உள்ளபடி அறியுங்கள்; ஜப்பான் படையெடுப்பை எதிர்பார்த்து எல்லா ஏற்பாடுகளையும் செய்யுங்கள்" என்று வலியுறுத்திச் சொல்கிறோம்.

"அபாயம்" என்று நாம் சொல்லும்போது, ஜப்பான் படையெடுப்பைச் சொல்லவில்லை. படையெடுப்பு ஒரு அபாயந்தான். ஆனால், நாற்பதுகோடி மக்கள் உள்ள இந்தியா — தளபதி வேவலைச் சேநாதிபதியாகக் கொண்ட இந்தியா — ஜப்பான் படையெடுப்பு அபாயத்தைக் குறித்துப் பயப்பட வேண்டியதில்லை. பயப்பட வேண்டிய அபாயம் வேறொன்று இருக்கிறது. அதுதான் இந்தியா தேசத்தில் சர்க்காருக்கும் ஜனங்களுக்கும் மன ஒற்றுமையில்லாமல் வேறுபட்டு நிற்பது.

இந்தக் காலத்து யுத்தத்தில் மற்ற தளவாட பலங்கள் எல்லாம் எவ்வளவு இருந்தாலும் பொது ஜனங்களின் உற்சாகமான ஒத்துழைப் பில்லாமல் ஜயிக்க முடியாதென்பது பிரத்யட்சமாய்த் தெரிந்திருக்கிறது. இதை இங்கிலாந்தில் உள்ள சில மௌடிகப் பிரபுக்கள் ஒப்புக்கொள்ளவில்லையென்றாலும், தளபதி வேவல் ஒப்புக்கொண்டிருப்பது நமக்கு மிகுந்த மகிழ்ச்சி தருகிறது.

"ஜனங்களின் ஒத்துழைப்பு அவசியந்தான்" என்று ஜெனரல் வேவல் சென்னையில் சொன்னார். அவரைக் காட்டிலும் நாம் ஒரு படி முன்னால் சொல்கிறோம். "அவசியம் மட்டுமில்லை; இன்றியமையாதது" என்கிறோம். "பொதுஜன ஒத்துழைப்பு இல்லாமல் ஜப்பானை ஜயிக்க முடியாது" என்றே சொல்கிறோம்.

இதற்கு இத்தனை நாளாய்க் கிடைத்திருக்கும் பிரமாணங்கள் போதவில்லையென்றால், இதோ இன்னொரு பிரமாணம் இருக்கிறது. ஜப்பான் விமானத்

தாக்குதலுக்கு முதன் முதலில் கல்கத்தாவை எடுத்துக் கொள்வானேன்? ''ஸுபாஷ் சந்திர போஸுக்கு வங்காளத்தில் ரொம்பச் செல்வாக்கு உண்டு; ஸுபாஷ் நம் கட்சியில் இருக்கிறார்; ஆகையால் வங்காளிகளும் நம் கட்சியில் இருப்பார்கள்; ஆதலின் வங்காளத்தை முதலில் தாக்குவோம்'' என்று ஜப்பானியர் எண்ணியிருக்கலாமென்று ஊகிக்க இடமிருக்கிறதல்லவா?

ஜப்பானியருடைய இந்த ஆசையில் - நம்பிக்கையில் - மண்ணைப் போட வேண்டியது அவசியமா இல்லையா? இந்திய சர்க்காரும் பொது ஜனங்களும் ஒன்றுபட வேண்டுமா, வேண்டாமா?

அப்படியானால், இதற்கு இந்தியாவில் என்ன ஏற்பாடு நடந்து கொண்டிருக்கிறது?

துரதிர்ஷ்டவசமாக, ஒரு ஏற்பாடும் நடக்கவில்லை. ஜெனரல் வேவல் உணர்ந்திருக்கும் அவசியத்தை வைஸ்ராயும் அவருடைய தோழர்களும் உணர்ந்திருப்பதாகத் தெரியவில்லை. அவர்கள் இன்னும் பிரிட்டிஷ் சர்க்காரின் பழைய பெயர்போன பிரித்தாளும் முறையிலேயே நம்பிக்கை வைத்திருப்பதாகத் தெரிகிறது.

வைஸ்ராய் சமீபத்தில் தமது திருவாயைத் திறந்து வேத மந்திரத்தையும், பைபிள் வாக்கியத்தையும் ஒத்த ஒரு அதிசயமான உண்மையைச் சொன்னார். அதாவது ''இந்தியா என்பது ஒரு தேசம்'' என்றார்.

இந்த ஆரம்ப பூகோள பாடத்தை இப்போது நமக்குக் கற்பிக்க முன் வந்தது எவ்வளவோ பெரிய ஆச்சரியமில்லையா?

இதைக் காட்டிலும் பெரிய ஆச்சரியம், இவ்வளவு ஸ்பஷ்டமான பிரித்தாளும் தந்திரத்தில் நமது மகா பெரிய தலைவர்கள் எல்லாம் தலை குப்புற விழுந்து உருளுவதுதான்.

''ஆகா! வைஸ்ராய் சொல்லி விட்டார்! இந்தியா ஒரு தேசமாம்!'' என்று மகா கனம் சாஸ்திரியாரும், திவான் ஸர் ஸி. பி. யும், வீர சவர்க்காரும் கூடப் பூரித்துப் போகிறார்கள்.

''இந்தியா ஒரு தேசம்......'' என்று வைஸ்ராய் சொன்னபோது, அதன் பின்னால், ''அந்த ஒரு தேசமான இந்தியா, இங்கிலாந்துள் அடக்கம்'' என்பது தொக்கி நிற்கிறது என்பதை இவர்கள் அறியவில்லை.

இந்தியாதான் ஒரு தேசம் ஆயிற்றே! ஜனாப் ஜின்னா அதைப் பிளக்கவேண்டும் என்பது பிசகுதானே? அத்தகைய பிசகான காரியத்தைக் கேட்கிறவருடன் சமரசம் செய்து கொண்டு வாருங்கள் என்று பிரிட்டிஷார் மற்றவர்களைப் பார்த்துச் சொல்வது என்ன நியாயத்தைச் சேர்ந்தது?

பிசகான காரியத்தைச் சொல்லும் ஜனாப் ஜின்னாவைத் தள்ளி விட்டல்லவா மற்றவர்களுடைய ஒத்துழைப்பைப் பெறவேண்டும்? ஜனாப் ஜின்னா யுத்த முயற்சிக்குக் குறுக்கே நின்றால் அவரை யல்லவா சிறையில் பிடித்து அடைக்க வேண்டும்?

இப்படி ஒன்றும் செய்யாமல் ''இந்தியாவின் சுதந்திரத்துக்கு ஜின்னாவின் சம்மதத்தைப் பெற்று வாருங்கள்'' என்று சொல்வது எப்பேர்ப்பட்ட வஞ்சகமான காரியம்?

இதைத் தெரிந்து கொள்ளாமல் கூத்தாடுகிறவர்களின் புத்தி நிலைமையைப் பற்றி நாம் என்ன சொல்வது?

காங்கிரஸ் தலைவர்களைத் தள்ளி விடுவோம். வீர சவர்க்கர்தான் ''சானுவத்தில் சேருங்கள்; சர்க்காருடன் ஒத்துழையுங்கள்'' என்று கூச்சலிட்டுப் பிரசாரம் செய்கிறாரே—அவரிடம் அதிகாரத்தைக் கொடுப்பதுதானே?

பிரிட்டிஷ் சர்க்கார் பிரித்தாளும் தந்திரத்தை இன்னும் நம்பியிருப்பது மிகவும் வருந்தத்தக்க விஷயம். இந்தத் தந்திரம் பழைய சமாதான காலத்தில் பயன்பட்டதெல்லாம் உண்மை; ஆனால் யுத்த காலத்தில் பயன்படாது.

ஜப்பான் படையெடுப்பு நேரும் போது சர்க்காரும் ஜனங்களும் வேற்றுமைப் பட்டிருப்பதில் பெரும் அபாயம் இருக்கிறது; பிரித்தாளும் தந்திரத்தால் இந்த அபாயம் தீராது என்று பிரிட்டிஷ் சர்க்காருக்கு நாம் வற்புறுத்திச் சொல்கிறோம்.

அதே அபாயத்தை நமது தலைவர்களும் பொது ஜனங்களும் கூட அறியவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம். பிரிட்டிஷ் பிரித்தாளும் தந்திர வலையில் நாம் விழுந்துவிடக் கூடாது. எப்படியாவது, எந்த வழியிலாவது, எவ்வளவு விட்டுக் கொடுத்தாவது, ஒற்றுமைப்பட்டு தேசிய சர்க்காரை அமைக்கவேண்டும். அப்போதுதான் ஜப்பானுடைய பூரண பலத் தாக்குதலை நாமும் பூரண பலத்துடன் எதிர்க்க முடியும்.

---

ஐந்து ரூபாய் பரிசு: சென்ற இதழின் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: எம். வி. சந்தானம், நெ. 18, பெரியதெரு, கும்பகோணம்.

# புது வருஷத் தீர்மானங்கள்



மேலும் வாணவேடிக்கைகள் நடத்த ஹிட்லர் தீர்மானிக்கிறார்.



நாஜிகளை ரஷ்யாவிலிருந்து உதைத்து விரட்ட ஸ்டாலின் தீர்மானிக்கிறார்.



ஓட்டப் பந்தயத்தில் பழைய ரிகார்டுகளை மிஞ்சிவிடத் தீர்மானம் செய்கிறார் முஸோலினி.



சர்ச்சில் 'இந்தியாவை விட்டு விட மாட்டேன்' என்று சபதம் செய்கிறார்.


'இந்தியாவும் பிரிட்டனும் ஒன்றே ஒன்றுதான்'
என்ற மகத்தான உண்மையைக்
குழந்தைகளுக்குப் போதிக்க
வைஸ்ராய் தீர்மானிக்
கிறார்.


ரூஸ்வெல்ட் மேலும் குமிழ்கள் ஊதிக்
கொண்டிருக்கத் தீர்மானிக்கிறார்.
நான்கு சுதந்திரங்கள்
அட்லாண்டிக் சாசனம்
?


அஜீர்ணத்துக்குப் பயப்
படாமல் அகப்பட்டதை
விழுங்க ஜப்பான்
தீர்மானிக்கிறது.


இந்தியா சுதந்திரம் அடைந்தே தீருவ
தென்று சங்கல்பம் செய்து கொள்கிறது.

மாடர்ன் தியேட்டர்ஸாரின்
1943-வது வருடப் பரிசுகள்
3 மகத்தான மாபெரும் படங்கள்

# அருந்ததி

பதிவிரதா தர்மத்தை விளக்கும்
அதிஅற்புத தமிழ்ச் சித்திரம்
டைரக்ஷன்
M.L. டாண்டன்

# திவான் பகதூர்

ஹாஸ்ய சமூக சித்திரம்
ஸ்டூடியோ
மாடர்ன் தியேட்டர்ஸ்

# வள்ளி திருமணம்

திருமுருகனின் காதல் லீலையில் சிறந்த சம்பவம்
டைரக்ஷன்
T.R. சுந்தரம் பி. ஏ. (லீட்ஸ்)



# ஏ. ஆர். பி. ரங்கன்

## "துமிலன்"

"**ஸா**ர்! விளக்கை அணையுங்கள், ஸார்!" என்று ஏ. ஆர். பி. வார்டன் ரங்கன் உரக்கச் சொன்னான்.

விளக்கு அணையவில்லை.

"விளக்கை அணைக்கிறேளா, இல்லையா?" என்று அவன் மறுபடியும் கத்தினான். அதனாலும் பயனில்லை.

ரங்கன் இப்படிக் கத்தியது புரொபஸர் கணபதி முதலியார் எம். ஏ., எல். டி., எப். ஆர். ஏ. எஸ். அவர்களின் வீட்டுவாசலில். ஆனால் கணபதி அப்போது மனிதர்கள் வாழும் உலகத்திலேயே இல்லை. பிராணிகளைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி நூலைப் படித்துக் கொண்டிருந்தார் :—

"**பெரிய ஆமைகள் பத்து நிமிஷ நேரத்தில் அறுபது கஜ தூரம் போகின்றன. அதாவது அவை ஒரு நாளைக்கு நாலு மைல் விகிதமாகிறது. ஆமைகளுக்குக் காது செவிடு. இதன் பயனாய் அவை காதல் புரிவது விசித்திரமா யிருக்கிறது. முதலில் பெண் ஆமை.........**"

கணபதி இந்தக் காதல் விசித்திரத்தை அறிவதில் ஈடுபட்டிருக்கும்போது ரங்கன் போட்ட சப்தம் அவர் காதில் எப்படி விழும்? யாரும் விளக்கை அணைக்காதிருக்கவே ரங்கனுக்குக் கோபம் வந்து விட்டது. அவன் வெகு வேகமாக வீட்டு வாசற்படிக்கு வந்து தடதடவென்று கதவைத் தன் பலங்கொண்ட மட்டும் தட்டினான். அப்பொழுதுதான் கணபதி செவிட்டு ஆமைகளை விட்டு விட்டு இந்த உலகத்திற்கு வந்து சேர்ந்தார். அப்பொழுதும் அவர் அவசரப்படாமல் மெத்தைப் படியிலிருந்து கீழே இறங்கி வந்து "என்ன, தம்பியா?" என்று வெகு நிதானமாகக் கேட்டார்.

"முதலில் விளக்கை அணையும். ஸார்!" என்று ரங்கன் அதிகார தோரணையில் சொன்னான்.

"ஓஹோ! ஏ. ஆர். பியா? வெளிச்சம் எங்கே ஐயா தெரிகிறது? நான்தான் உங்கள் தொல்லைக்குப் பயந்து காற்றுக்கூட வேண்டாமென்று எல்லா ஜன்னல்களையும் சாத்தி வைத்திருக்கிறேனே" என்று குத்தலாகச் சொன்னார்.

"அதோ பாரும்!" என்று ரங்கன் உயரவிருந்த ஒரு ஜன்னலைச் சுட்டிக் காட்டினான். அந்த ஜன்னலிருந்து ஒரு குண்டூசி நுழையக்கூடிய துவாரத்தின் வழியாக வெளிச்சம் வந்து கொண்டிருந்தது.

கணபதி அதைப் பார்த்துச் சிரித்து விட்டு "இதற்குத்தானா பிரமாதப் படுத்துகிறாய்? எண்ணூறு மைலுக்கு அப்பா லிருந்து விமானத்தில் வரும் விரோதி இந்த வெளிச்சத்தை நம்பிக் கொண்டா வரப்போகிறான்? இப்போது தான் பட்டப் பகலிலேயே வந்து குண்டு போடுகிறானே" என்றார்.

"அதெல்லாம் எனக்குத் தெரியும், நீர் போய் விளக்கை அணைக்கப் போகிறீரா? அல்லது நான் போய் அணைக்கட்டுமா?" என்று சொல்லி ரங்கன் மாடிப்படி பக்கம் போகக் கிளம்பினான்.

"போ, பார்க்கலாம்!" என்று கணபதி படிக்கட்டை மறைத்துக் கொண்டு நின்றார். விஷயம் முற்றிப் போய் அடிதடி சண்டையில் முடியும் போலிருந்தது.

இந்த சமயத்தில் "அப்பா, அங்கே என்ன சப்தம்? யார் வந்திருக்கா?" என்று கேட்டுக்கொண்டே கணபதியின் பெண் விஜயம் வந்தாள். அவள் வரும் போதே "இருட்டில் நிற்கிறேனே" என்று சொல்லிக்கொண்டு படிக்கட்டு விளக்கைப் போட்டாள். பெரியவரைத் தள்ளிவிட்டு மாடிக்குப் பாய விருந்த ரங்கன் விஜயத்தைக் கண்டதும், பிரமித்து நின்று விட்டான். அவன் வெளிச்சம் தெரிவதைக்கூட மறந்து போய்ச் சிறிது நேரம் பேசாதிருந்தான். காரணம் சொல்ல வேண்டுமா? காதல் தான்! முன் காலத்தில் நந்த வனங்களிலும், ஆற்றங் கரைகளிலும் காதல் ஏற்படுவது வழக்கம். இப்பொழுது அதற்கெல்லாம் சாவகாச மில்லாததால் சினிமாக் கொட்டகைகளிலோ மாடிப் படிகளிலோ எங்கே வேண்டுமானாலும் காதல் ஏற்படுகிறது.

விஜயத்துக்கு விஷயம் புரிந்தது. தன் தகப்பனார் ஏ. ஆர். பி. முறைகளைப் பற்றி அடிக்கடி பரிகசித்துப் பேசுவது அவளுக்குத் தெரியும். ஏ. ஆர். பி. காரர்களைக் கொண்டு ஒழிந்த வேளைகளில் காய்கறிகள் பயிரிடச் சொல்லலா

மென்று பத்திரிகைகளுக்கு எழுதியது அவர்தான். விளக்கணைப்பினால் கொஞ்சங்கூடப் பிரயோசனமில்லை என்பது அவருடைய திடமான நம்பிக்கை. ஏனென்றால் சில சமயம் எதிரி விமானங்கள் குண்டு வீசுவதற்கு முன்னால் நோட்டீஸ்கூடப் போட்டு விட்டுக் குண்டு போடும்போது, ஜன்னல் துவாரத்திலிருந்து வெளிச்சம் வருவதைப் பற்றிப் பிரமாதப்படுத்துவது அவருக்குச் சுத்தப் பயித்தியக்காரத்தனமாகத் தோன்றிற்று. அவர் விளக்கணைப்பதைப் பற்றித்தான் தகராறு செய்து கொண்டிருப்பாரென்று ஊகித்த விஜயம் சச்சரவை முற்றவிட விரும்பவில்லை.

"தினம் பத்து விளக்காவது அணைத்தால்தான் அவாளுக்கெல்லாம் தூக்கம் வரும் போலிருக்கு. அவா தூங்காத பாவம் நமக்கு வேண்டாம்" என்று அவள் சொல்லிவிட்டுப் போய் இரண்டு விளக்குகளையும் அணைத்தாள். ரங்கன் ஒன்றும் சொல்லத் தோன்றாமல் வெளியே போனான்.

சிலர் சிறு குழந்தைகளாய்த் தொட்டிலில் படுத்துக்கொண்டிருக்கும்போது தாங்கள் வருங்காலத்தில் இன்ன உத்தியோகம் பார்க்க வேண்டுமென்று தீர்மானித்து விடுவது வழக்கம். ரங்கன் அந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவன். அவனுக்கு நாலு வயதாயிருந்தபோதே அவன் ஒருநாள் ஒரு இரும்பு மரக்காலைத் தன் தலையிலெடுத்து வைத்துக்கொண்டு "நான் போலீஸ் இன்ஸ்பெக்டர்" என்று சொல்வானாம். ரங்கனுடைய தாயார் இதைப் பற்றி வந்தவர்களிடம் சொல்லிப் பெருமைப் படுவாள். ரங்கன் காலேஜ் படிப்பு முடிந்ததும் போலீஸில் சேர முயன்றான். அந்த உத்தியோகத்துக்கு வேண்டிய எல்லா அம்சங்களும் அவனிடமிருந்தன. ஆனால் உயரத்தில் அரைவிசை அங்குலம் குறைவாக இருந்ததால் அவனுக்கு அந்த உத்தியோகம் கிடைக்கவில்லை. கடைசியில் சும்மா உட்கார்ந்து கொண்டிருப்பதற்குப் பதிலாக ஏ. ஆர். பி.யில் சேர்ந்தான். போலீஸ்காரனாகலாமென்ற பால்ய ஆசை பலிக்கா விட்டாலும் அவன் இரும்பு மரக்காலைத் தலையில் வைத்துக் கொள்ளும் ஆசை பலித்து விட்டது. ஏனென்றால் இப்பொழுது வார்டன் என்ற ஹோதாவில் அவன் தன் தலையில் இரும்புத் தொப்பி வைத்திருக்கிறான்!



"அப்பா, அங்கே என்ன சப்தம்?"

ரங்கன் தன் கடமையைச் செய்வதில் மகா கண்டிப்பான பேர்வழி. அவன் வேலைக்கு வந்த புதிதில் எங்கேயாவது வெளிச்சம் தெரிந்தால் ஊது குழலால் ஊதித் தள்ளி விடுவான். அவன் ஒரு சமயம் ஆத்திரத்தோடு ஊதியபோது ஊதுகுழலே தொண்டைக்குள் போய்விட்டது.

அவனுடைய டிவிஷனில் அநேகமாக எல்லாரும் விளக்கணைப்பு விதிகளைச் சரிவரப் பின்பற்றி வந்தார்கள். சிலர் அவன் தொல்லைக்குப் பயந்து வேறு இடங்களுக்குக் குடி போய் விட்டார்கள். மினிமினிப் பூச்சி கூட அவனைக் கண்டு பயப்பட்டதென்றால் வேறு சொல்வானேன்?

மேற்படி சம்பவம் நடந்து இரண்டுநாள் வரை அவன் கணபதி முதலியார் வசித்த தெரு வழியாகவே போகவில்லை. அப்படிப் போகாதிருப்பது தன் கடமையைச் செய்யத் தவறியதாகுமே என்று அவன் மனச்

சாட்சி உறுத்திற்று. தான் போகாத தினங்களில் அந்த வம்புக்காரக் கணபதி இஷ்டப்படி. விளக்கைப் போட்டுக் கொண்டிருந்தால் என்ன பண்ணுவ தென்று பயந்தான். அதற்காக அவன் ஒரு . நாள் அவர் வீட்டு வழியாக இரவில் போனான். அவன் பயந்தது போலவே கணபதியின் வீட்டில் விளக் கெரிந்து கொண்டிருந்தது. அதற்கு முன்னர் ஜன்னல் கதவாவது சாத்தி யிருப்பது வழக்கம். அன்று அதுவு மில்லை. கதவுகளெல்லாம் திறந்து கிடந் தன. வெளிச்சம் தெருவில் நன்ருகத் தெரிந்தது.

ரங்கன் அதைக் கண்டு பதை பதைத்துப் போனான். அந்தமான் தீவி லிருக்கும் ஜப்பானிய விமானிகள் அந்த வெளிச்சத்தைப் பார்த்து விட்டால் என்ன பண்ணுகிறது என்ற பயம். "ஸார், ஸார் ஸார்! விளக்கை அணை யுங்கள்" என்று ஒரே. யடியாகக் கூச்சல் போட்டான்.

மறு நிமிடம் விஜயம் மாடித் தாழ்வா ரத்தில் வந்து நின்று கொண்டு "ஸார் தூங்குகிருர். நான்தான் பரீட்சைக் குப் படித்துக் கொண்டிருக்கிறேன். அப்பாவை எழுப்பி விளக்கை அணைக் கச் சொல்லட்டுமா!" என்ருள்.

ரங்கனுக்குக் கோபம் வந்தாலும் ஒருவாறு சமாளித்துக் கொண்டு "அம்மணி, நீங்களே அணையுங்களேன்" என்று சொன்னான். "இதோ!" என்று ஓடிப் போய் விளக்கை அணைத்தாள்.

ரங்கனுக்கு, தான் அந்தப் பெண்ணைக் கண்டதும் ஒன்றுஞ் சொல்லத் தோன்ரு மல் நின்றதை நினைக்கநினைக்க வெட்கமா யிருந்தது. கணபதிமுதலியார் இன்னொரு தரம் விளக்கணைப்பு விதிகளை மீறினல் கட்டாயம் போலீஸுக்கு ரிப்போர்ட் செய்து விடுவதென்று தீர்மானித்தான். அந்தப் பெண்ணே வந்து, "தயவு செய்து மன்னித்து விடுங்கள்" என்று கேட்டுக் கொண்டாலும் விடுவதில்லை யென்று சங்கற்பஞ் செய்து கொண்டான்.

**ம**று தினம் அவன் தன் 'டிவிஷ'னி லுள்ள வீட்டினரைப் பற்றிய ஸென்ஸஸ் எடுக்க வேண்டி யிருந்தது. அதற்காக அவன் கணபதியின் வீட்டுக்கு வந்த போது அவர் இல்லை. விஜயம் மட்டும் வாசற் பக்கத்தில் தோட்டத்தில் நின்று கொண்டிருந்தாள். ரங்கன் அவளிடம் போய் "வீட்டில் பெரியவர்கள் யாரு மில்லையா?" என்று விசாரித்தான்.

"இல்லை. அப்பா வெளியில் போயி ருக்கிருர். என்ன விசேஷம்?"

"இந்த வீட்டில் எத்தனை பேர் இருக் கிருர்கள்?" என்று ரங்கன் கேட்டான்.

"எத்தனை பேர் இருந்தால் உங்க ளுக்கு என்ன? எதற்காகச் சொல்ல வேண்டும்?" என்று கேட்டாள் விஜயம்.

"நாங்கள் கேட்க வேண்டியது எங் கள் கடமை!"

"கேட்டாயிடுத்தல்லவா? போங்கள்."

"சரியான தகவல் கொடுக்க வேண்டி யதும் உங்கள் கடமை."

"எனக்குத் தெரியாது. எங்கப்பா வந்த பிறகு கேட்டுக்கொள்ளுங்கள்."

"உங்களுக்குத் தெரிந்த வரையில் சொல்லுங்களேன். இந்த வீட்டில் மொத்தம் எத்தனை பேரிருக்கிறீர்கள்?"

"இருபத்தைந்து பேர்!"

"என்ன, இருபத்தைந்து பேரா?"

"ஆமாம்!"

"தகப்பனும் பெண்ணும் இரண்டு பேர், ஒரு சமையற்காரப் பாட்டி ஆக மூன்று பேர் இருக்கிறீர்க ளென்று கேள்விப்பட்டேன்."

"நீங்கள் எதற்காகக் கேட்கிறீர்கள். மண்ணெண்ணெய்க் கூப்பன் கொடுக்கவா?"

"இல்லை"

"அரிசி அளந்து கொடுக்கவா?"

"இல்லை."

"வீட்டில் யாராவது சிப்பாய்களுக்கு இடங் கொடுக்கச் சொல்லவா?"

"இல்லை. காலைக்குத் தப்பித் தவறி குண்டு விழுகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். நாங்கள் உங்கள் மூன்று பேரையும் பார்த்து விட்டு பாக்கி இருபத்திரண்டு பேரையும் காணுமே யென்று தேடிக் கொண்டிருப்போம். சரியான கணக்குச் சொன்னல் அந்தத் தொல்லை இராது" என்ருன்.

"சரி! அப்படியானல் மூன்றுபேர் தான்" என்ருள் விஜயம்.

அந்த சமயத்தில் தெருவோடு போய்க் கொண்டிருந்த ரங்கனின் தாயார் வந்து "ரங்கா, என்ன தர்க்கம் பண்ணிக் கொண்டிருக்கிருய்?" என்றுகேட்டாள்.

"இல்லை அம்மா! மண்ணெண்ணெய்க் கூப்பன் கொடுப்ப தென்ருல் இவர்கள் வீட்டில் இருபத்தைந்து பேராம். இல்லா விட்டால் மூன்று பேராம்" என்று சொல்லிக் கொண்டே பக்கத்து வீட் டுக்குப் போனான்.

இதைக் கேட்டு அவன் தாயாரும் விஜயமும் சிரித்தார்கள், அந்த அம்மா

னுக்கு என்னமோ விஜயத்தைப் பார்த்ததும் அவளுடன் பேசவேண்டுமென்று தோன்றிற்று. "இது உங்கள் சொந்த வீடுதானே!" என்று பேசத் தொடங்கினாள். மேலே பேசியதிலிருந்து விஜயத்துக்குத் தாயார் இல்லை யென்றும், தகப்பனார் மட்டுந்தான் இருக்கிறாரென்றும், அவளுக்கு இந்த வருஷம் எப்படியாவது கல்யாணம் நடத்தி விட முயற்சி செய்து வருகிறாரென்றும் தெரிந்து கொண்டாள். அந்த அம்மாள் வீடு சென்றதும் தன் கணவனைக் கணபதி வீட்டுக்குப் பெண் பேச அனுப்பினாள். ரங்கன் நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவனாதலாலும் சொத்து உள்ளவனாதலாலும் அவனுக்கு விஜயத்தைக் கொடுக்க கணபதி ஒப்புக் கொண்டார். கல்யாணத்தைத் தை மாதத்தில் நடத்த தீர்மானித்து முகூர்த்தமும் வைத்து விட்டார்கள்.

முகூர்த்தத் தேதிக்குச் சில தினங்கள் முன் ஒரு நாள் ஏ. ஆர். பி. ஒத்திகைப் பயிற்சி நடந்தது. முன்னெல்லாம் இந்தப் பயிற்சிகளுக்கு வெளி நபர்களைக் "காஷ்வாலிடி" (அதாவது குண்டு விபத்துக்கானானவர்)களாக அமர்த்துவது வழக்கம். ஆனால் இப்போது வார்டன்களையே அதற்கு உபயோகிக்கிறார்கள். "வார்டன் சின்னசாமி ஒரு காஷ்வாலிடி; அவனுக்கு குண்டு விபத்தினால் மூக்குப் போய் விட்டது" என்று அதிகாரி உத்தரவு போட்டால் அவன் மூக்குப் போய் விட்டவன் போல் நடிக்கவேண்டும். ரங்கனை அன்றையப் பயிற்சிக்கு ஒரு 'காஷ்வாலிடி'யாக நியமித்திருந்தார்கள். அவன் மயக்கம் வந்தவனைப் போல் இருக்கவேண்டும் என்று உத்தரவு.

இரவு ஏழு மணிக்கு ஒத்திகை நடந்தது. எதிரி விமானங்கள் வந்து குண்டுகளைப் போட்டன! ரங்கன் மயக்கமாகக் கீழே விழுந்தான்! உடனே பக்கத்திலிருந்த மற்ற வார்டன்கள் அவனைத் தூக்கி ஆம்புலன்ஸ் காரில் போட்டார்கள். மறு நிமிடம் வண்டி ஜெனரல் ஆஸ்பத்திரிப் பக்கம் பறந்து சென்றது.

வண்டி நகர ஆரம்பித்ததுமே ரங்கனின் நண்பர்கள் "ரங்கா! இன்ஸிடென்ட் ஆய்விட்டது, எழுந்திரு" என்றார்கள். ரங்கன் எழுந்திருக்கவில்லை. தமாஷுக்காகப் பாசாங்கு செய்கிறானென்று எண்ணி இடுப்பில் கிசு கிசு மூட்டினார்கள்.

ஊஹூம். ரங்கன் அசையவில்லை. வார்டன்கள் ஆச்சரியப்பட்டார்கள். சாதாரணமாக இரண்டு காதும் போய் விட்ட காஷ்வாலிடி'யைச் சந்து முனையில் அவர்கள் இறக்கி விடுவது வழக்கம். அவன் பாட்டில் இறங்கி ஜோராக நடந்து போய்விடுவான்! அப்படியிருக்க இந்த ரங்கன் செய்தது அவர்களுக்கு ஆச்சர்யமா யிருந்தது.

"ரங்கா! விளையாடாதே! நாழியாகி விட்டது. ஆம்புலன்ஸைத் திருப்ப அனுப்பிவிட வேண்டும். எழுந்திரு!" என்றார்கள்.

ரங்கன் படுத்தபடியே அசைவற்றுக் கிடக்கவே நண்பர்களுக்குப் பயம் தோன்ற ஆரம்பித்தது. ஒரு வார்டன் "நிஜமாகவே ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டியதுதான்" என்று கூறி வண்டியை ஆஸ்பத்திரிக்கு ஓட்டச் சொன்னான்.

ஆஸ்பத்திரியில் டாக்டர்கள் அவனுக்கு என்னென்னமோ சிகிச்சை செய்து பார்த்தார்கள். ஒன்றிலும் பயனில்லாமற் போகவே அவனுடைய பெற்றோர்களுக்குத் தகவல் தெரிவித்தார்கள். அவர்கள் கணபதியையும் விஜயத்தையும் அழைத்துக்கொண்டு ஆஸ்பத்திரிக்கு ஓடோடியும் வந்தனர்.

ரங்கனுக்கு மயக்க மேற்பட்டதைப் பற்றிய விவரங்களை அறிந்த கணபதிக்கு ஒரு சந்தேகம் தோன்றிற்று. பையன் கடமை, கடமை என்று சொல்லி அதே பைத்தியமா யிருப்பவன். மயக்கம் ஏற்பட்டவனைப் போல் இருக்கவேண்டுமென்று விரும்பிய அவனுக்கு நிஜமாகவே மயக்கம் வந்திருக்கக் கூடும் என்று ஊகித்தார். இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் விளக்குப் போட்டுக் கொண்டு ஆமையைப் பற்றிய வரலாறுகளைப் படிப்பவருக்கு இப்படி ஊகிப்பது ஒரு பிரமாதமில்லை யல்லவா?

அவர் உடனே என்ன செய்ய வேண்டுமென்று ஒரு முடிவுக்கு வந்து விஜயத்திடம் ஏதோ சொன்னார். அவள் ரங்கன் பக்கத்தில் வந்து, "நன்னாயிருக்கு! எத்தனை நாழி இப்படிப் படுத்துக் கொண்டிருக்கிறது? நான் சொல்கிறதைக் கேளுங்கள், எழுந்திருங்கள்!" என்று அதிகார தோரணையில் சொன்னாள்.

ரங்கன் கண்ணைக் கசக்கிக் கொண்டு எழுந்திருந்து உட்கார்ந்து கண்ணைத் திறந்து பார்த்தான். வெளிச்சம் தெரிந்தது. அவ்வளவுதான்; ஒரு ஸ்பிரிங் மாதிரி எழுந்திருந்து நின்று கொண்டு "ஸார், வெளிச்சம் தெரிகிறது. விளக்கை அணையுங்கள்!" என்றான்.

1943 ௵ ஜனவரி

**7உ முதல்**

சென்னை

# பாரகனில்

மகத்தான ஆரம்பம்.



ஆந்திர தேசத்தில்
முக்கிய
இடங்களிலும்
ஆரம்பமாகிறது.

# வாஹினி
யாரின்
# பக்த போதனா

நாகையா நடித்தது... டைரெக்ஷன்.. கே.வி.ரெட்டி, B.Sc.Hons



# ஆடல் பாடல்



"கர்நாடகம்"

## திறப்பு விழாக்கள்

சென்னை நகரின் சமூக வாழ்க்கையில் டிசம்பர் கடைசியில் நடக்கும் சங்கீத விழாக்கள் மிகுந்த முக்கியத்தை அடைந்திருக்கின்றன. இந்த விழாக்களைத் திறந்து வைப்பதற்குச் சங்கீதம் தெரியாத பிரமுகர்களை ஒவ்வொரு வருஷமும் அழைப்பதும் வழக்கமாயிருந்து வருகிறது. இந்தத் திறப்பு விழாக்களை நடத்துகிறவர்கள் சாதாரணமாக "எனக்குச் சங்கீதத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது" என்று அவையடக்கம் சொல்லிக் கொண்டுதான் ஆரம்பிக்கிற வழக்கம். ஆனால் இந்த வருஷம் மியூசிக் அகாடமி விழாவைத் திறந்து வைத்த ஸர் எம். வெங்கட சுப்பராவைப்போல் அவ்வளவு அழகாக யாருமே தங்கள் பிரசங்கத்தை ஆரம்பித்ததில்லை. முதல் வாக்கியத்திலேயே இவர் தம்மை 'இக்னோரமஸ்' என்று தெரிவித்துக்கொண்டார். 'இக்னோரமஸ்' என்னும் அழகிய கம்பீரமான வார்த்தைக்குத் தமிழில் சரியான பிரதிபதம் கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது. ஆங்கிலமும் தமிழும் நன்கறிந்த சில நண்பர்களைக் கேட்டுப் பார்த்தேன். அவர்கள், "அஞ்ஞான இருள் குன்று" "மௌடீக மலை" "மட சாம்பிராணி" முதலிய சொற்றொடர்களைக் கூறினார்களே தவிர, 'இக்னோரமஸ்' என்பதைப்போல் கம்பீரமான தனிப் பதம் ஒன்றைக் குறிப்பிட முடியவில்லை. இது ஒருபுறமிருக்க.

ஸர் வெங்கட சுப்பராவ் தம்மைச் சங்கீத விஷயங்களில் 'இக்னோரமஸ்' என்று கூறிக் கொண்டது எவ்வளவு சத்தியமான வார்த்தை என்பதை அவருடைய பேச்சின் கடைசிப் பகுதியில் நிரூபித்து விட்டார். தமக்குக் கொஞ்சமும் தெரியாத விஷயத்தைப்பற்றி வேறு யாரோ சொல்லிக்கொண்டிருந்ததை ஒப்புவித்தார். தமிழ்ப் பாட்டு இயக்கத்தை வெளுத்து வாங்கினார். "கலையில் அரசியலைக்கொண்டு வரலாமா?" என்று கேட்டார். "இத்தனை காலமும் நீங்கள் தெலுங்குப் பாட்டுக்களையேதான் கேட்டுக் கொண்டு வந்தீர்கள்? இப்போது தமிழ்ப் பாட்டு என்ன வந்தது கேடு?" என்றார். "திராவிட பாஷைகளுக்குள் தெலுங்குதான் இனிமையானது" என்னும் பழைய பெயர் போன அபத்தத்தைத் திருப்பிச் சொன்னார். "தமிழ்ப் பாட்டு வேணுமானால் தேவாரம்—திருவாசகம் இருக்கிறதே? வேறு என்னத்துக்கு?" என்று கேட்டார். இன்னும், "இம்மாதிரி பயங்கர மர்ம இயக்கங்களினால் ஜெர்மனி எத்தகைய கேட்டை அடைந்தது தெரியுமா?" என்று மயிர்க் கூச்செறியக் கேட்டுத் தமிழிசைக்காரர்கள் எல்லாம் ஒரு வேளை ஹிட்லர் கோஷ்டியைச் சேர்ந்தவர்களோ என்ற சந்தேகத்தை உண்டாக்கினார். "நல்லவேளையாக, இந்தத் தமிழிசை இயக்கம் தமிழ் மக்களுடைய இருதயத்தையோ, தமிழ்ப் பாடகர்களையோ கவரவில்லை யென்று அறிகிறேன். ரொம்பத் திருப்தி; பரிபூரண சந்தோஷம். ஆனாலும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். தமிழிசையாகிய பேரபாயத்தை அடியோடு வேரறுக்காத வரையில் நிம்மதியாகத் தூங்க முடியாது" என்றார்.

மூன்று நிமிஷத்துக்குள் இவ்வளவு அபத்தங்களையும், இல்லாத காரியங்களையும், அசட்டு வாதங்களையும் சொல்லக் கூடியவருக்கு 'இக்னோரமஸ்' என்ற பட்டம் தகுதியில்லை யென்றால், வேறு யாருக்குத்தான் தகுதியாயிருக்க முடியும்?

தமிழிசை இயக்கத்தின் பைத்தியக்காரத்தனத்தை நன்கு எடுத்துக் காட்டும் பொருட்டு, மியூசிக் அகாடமியார் 1941-ம் வருஷத்தில் ஒரு ஆந்திரரை விழாவைத் திறப்பதற்கும், இன்னொரு ஆந்திரரை மகாநாட்டில் அக்கிராசனம் வகிக்கவும் தேர்ந்தெடுத்தார்கள். ஆனால் அவர்கள் இருவரும் அகாடமியை ஏமாற்றி, "சங்கீதத்தில் பாஷை முக்கியமானதுதான்; தெரிந்த பாஷையில் பாடுவதுதான் விசேஷம்" என்று சொல்லி விட்டார்கள்.

இந்த வருஷத்து அகாடமி விழாவைத் திறந்து வைத்த ஸர் வெங்கடசுப்பராவ் அகா

டமிக்காரர்களின் நோக்கத்தை நன்கு நிறைவேற்றி விட்டார். சொல்லிக் கொடுத்த பாடத்தை அப்படியே ஒப்புவித்து விட்டார்.

ஆனால், அகாடமியாரின் துரதிர்ஷ்டமும், தமிழ்நாட்டின் நல்லதிர்ஷ்டமும், சங்கீத தேவதையின் நல்ல காலமும் சேர்ந்து, இந்த வருஷத்து மகாநாட்டுக்கு மழவராய நேந்தல் சுப்பராம பாகவதர் அக்கிராசனராக வரும்படி நேர்ந்தது. ஸர் எம். வெங்கட சுப்பராவின் அபத்தங்களுக்கு வேறு யாரும் பதில் சொல்வதற்கு அவசியமே இல்லாதபடி பாகவதர் தமது அக்கிராசனப் பிரசங்கத்தில் பதில் சொல்லி விட்டார்.

(1) "தமிழ் சங்கீதத்துக்கு உகந்த பாஷையில்லை;" (2) "தமிழில் உயர்ந்த சாஹித்யங்கள் இல்லை;" (3) "தமிழிசை இயக்கத்துக்குத் தமிழ்நாட்டில் ஆதரவு இல்லை" என்னும் மூன்று கூற்றுக்களும் அபத்தம் என்பதைச் சங்கீத வித்வத் சபையின் அக்கிராசனர் எவ்வளவு தெளிவாக எடுத்துச் சொல்கிறார், கேளுங்கள் :

"இன்னும் நம் தமிழ் நாட்டின் தாய்ப் பாஷையாகிய அமிழ்தினுமினிய தமிழ் மொழியில் நம் முன்னோர்களான ஸ்ரீ சமயாசாரியாள், ஸ்ரீ முத்துத் தாண்டவர், ஸ்ரீ அருணாசலக் கவி, திருவிளையாடல் ஸ்ரீ சுப்ரமணிய பாரதிகள், ஸ்ரீ கவி குஞ்சர பாரதிகள், ஸ்ரீ சிதம்பர பாரதிகள், ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதிகள், ஆகியோர் பக்தி பரவசத்தோடு ஆயிரக் கணக்கான பண்களும், கீர்த்தனங்களும், பதங்களும் தேனொழுகப் பாடியுள்ளார்கள். அவற்றில் தெலுங்கு முதலான பாஷைகளிலுள்ள பெரியவாளின் கீர்த்தனங்களைப் போலவே அந்தந்த ஸந்தர்ப்பங்களுக்கு உகந்தவாறு ராகம், பாவம், தாளம் ஆகிய சிறந்த அம்சங்கள் விசேஷமாய்ப் பொருந்தியிருப்பதைக் காணலாம். ஆகையால் தமிழ்ப் பெரியாரின் கீர்த்தனங்களையும் ஸங்கீத வித்வான்கள் கையாளவேண்டும் என்பது என் அபிப்பிராயம்."

பெரிய பரம்பரையில் வந்தவர் மகா வித்வான் ஸ்ரீ சுப்பராம பாகவதர். "இந்த நாளில் உள்ள வித்வான்களுக்குள்ளே சங்கீதக் கலையின் சகல அம்சங்களையும் பூரணமாய் அறிந்தவர் இவர் ஒருவர்தான்" என்று ஸ்ரீ பொன்னையாப் பிள்ளை இவரை மகாநாட்டுத் தலைமைக்குப் பிரேரேபிக்கும்போது கூறினார். அத்தகையவர் தமிழில் "ஆயிரக் கணக்கான பண்களும், கீர்த்தனங்களும், பதங்களும் இருக்கின்றன" என்று கூறுகிறார். 'இக்னோரமஸ்' ஸர் வெங்கடசுப்பராவும் அவருக்குப் பாடஞ் சொல்லிக் கொடுத்தவர்களும், "தமிழில் தேவாரம் திருவாசகந்தான் இருக்கின்றன; கீர்த்தனம் இல்லை" என்கிறார்கள். யார் பேச்சை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நாம் அறிவோம். ஸர் வெங்கட சுப்பராவின் சொல்லிக் கொடுக்கப்பட்ட பேச்சுக்கு மறு நாள் 25உ கோகலே ஹாலிலும் பதில் சொல்லப்பட்டது. இங்கே பைன் ஆர்ட்ஸ் ஸொஸைடியாரின் சங்கீத விழாவை ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் ஆரம்பித்து வைத்தார். ராஜா ஸர் அவர்களை இந்த விழாவை ஆரம்பிக்க அழைத்ததே ஸர் எம். வெங்கடசுப்பராவுக்கு ஒரு தக்க பதில் என்று சொல்லலாம். ராஜா ஸர் அவர்கள் தமிழிசை இயக்கத்துடன் கலந்தவர் என்பது சகலருக்கும் தெரியும். பெரிய மனுஷராதலால் இந்த இயக்கமே அவரால் ஆரம்பிக்கப்பட்டு அவரால் நடந்து வருவதாகத் தவறாய் நினைப்பவர்களும் இருக்கிறார்கள். அத்தகையவரை பைன் ஆர்ட்ஸ் ஸொஸைடியார் திறப்பு விழா நடத்த அழைத்தார்கள் என்றால், தமிழிசை இயக்கம் தமிழ்நாட்டில் வேரூன்றி விட்டதென்பதற்கு வேறு அத்தாட்சி வேண்டியதில்லை. அகாடமியாரும், அவர்கள் தேடிப் பிடிக்கும் 'இக்னோரமஸ்'களும் கண்ணை மூடிக் கொண்டால் உலகம் அஸ்தமித்து விடாது என்பதற்கும் இது அறிகுறியாகும்.

ராஜா ஸர் அவர்களின் பிரசங்கத்தை நேயர்கள் தினசரிகளில் படித்திருப்பார்கள். தமிழ் இசை இயக்கத்தின் நோக்கத்தை அவர் தெளிவாக எடுத்துக் கூறினார். தமிழிசை இயக்கம் உண்மையில் சங்கீத வளர்ச்சி இயக்கந்தான் என்பதை எடுத்துக் காட்டினார். தமிழ் நாட்டில் தமிழர்கள் தமிழ்ப் பாட்டுக்களை விரும்புவது இயற்கை என்றும், அதற்கு விரோதமாகப் பேசுவது இயற்கைக்கு விரோதம் என்றும் கூறி, மகாகனம் சாஸ்திரியார், ராஜாஜி, டாக்டர் டாகுர் ஆகியவர்களின் கூற்றுக்களிலிருந்து அத்தாட்சியும் எடுத்துக் காட்டினார்.

ராஜா ஸர் அவர்களின் பேச்சில் ஒரு விஷயம் மிகவும் முக்கியமானது. பாடகர் பாடகிகளை அவர்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாகத் தமிழிசைக்காரர்கள் தமிழ்ப் பாட்டுப் பாடச் சொல்கிறார்கள் என்று தமிழ் இசை விரோதிகள் புகார் சொல்கிறார்கள். உண்மை இதற்கு நேர்மாறானது என்று ராஜா ஸர் எடுத்துக் காட்டினார்.

"சங்கீத சபைகளின் நிகழ்ச்சி முறையை நோக்கினால் தாய்மொழி யல்லாத பிற மொழிப் பாடல்களையே பாட வேண்டுமென்று பாடகர்கள் பாடகிகள் வந்

புறுந்தப் படுகிறர்கள் என்பது சொல்லா மலே விளங்கும்.''

இவ்விதம் ராஜா ஸர் சொல்வது முற்றிலும் உண்மை என்பதை நிரூபிக்கப் பல அத்தாட்சிகள் சமீபத்தில் கிடைத்திருக்கின்றன. இதைப் பற்றிப் பிறகு விவரமாக எழுத வேண்டும்.

தமிழ்ப் பாட்டு இயக்கம் ரஸிகர்களின் ஆதரவை எவ்வளவு தூரம் பெற்று விட்டது என்பதை நிரூபிக்க இன்னொரு சிறந்த அத்தாட்சி கோகலே ஹாலில் அன்று மாலையே கிடைத்தது. திறப்பு விழாவுக்குப் பிறகு நடந்த ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரியைத்தான் குறிப்பிடுகிறேன். ஸ்ரீமதி எம். எஸ். எத்தனையோ கச்சேரிகள் செய்திருக்கிறார்கள்; கோகலே ஹாலிலும் எத்தனையோ கச்சேரிகள் நடந்திருக்கின்றன. ஆனால் இதற்குமுன் எம். எஸ். இம்மாதிரி கச்சேரி செய்ததில்லை, கோகலே ஹாலிலும் இம்மாதிரி கச்சேரி நடந்ததில்லை யென்று சொல்ல வேண்டும். பெரும்பான்மையாகத் தமிழ்ப் பாட்டுக்கள் தான் பாடினார். பந்துவராளி, ஆபோஹி, சங்கராபரண ராகங்களில் இசைப் பிரவாகம் பெருக்கெடுத்து ஓடிற்று. அந்த ராகங்களில் "தின்னருன்", "சபாபதிக்கு" "தூக்கிய திருவடி" என்னும் கீர்த்தனங்கள் ஒவ்வொரு ரஸிகருடைய உள்ளத்தையும் துள்ளும்படி செய்தன. மூதற் பகுதியில் கடைசிக் கீர்த்தனமாக,

"காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே என்னைக்
கைதூக்கி ஆள் தெய்வமே"

என்று மத்தியம சுருதியில் எடுத்தபோது சபையில் நிச்சப்தம் ஏற்பட்டது. "இங்கும் அங்குமாய்த் தேடி" என்னும் இடத்தில் பலருக்கும் பரவசம் உண்டாயிற்று; சிலருடைய கண்ணில் ஜலம் வந்து விட்டது. கீர்த்தனம் முடிந்ததும், என்னப் போட்டால் என்ன விழாதபடி கூடி யிருந்தவர்கள் அவ்வளவு பேரும் ஏகமனதாகக் கரகோஷம் செய்து மண்டபம் இடிந்து விழுமோ என்ற சந்தேகத்தை உண்டாக்கி விட்டார்கள். இத்தகைய பரவச நிலைமை, பின்னால் "கண்ணை என்று நான் கதறிடும் போதினில்" என்ற இடத்திலும் ஏற்பட்டது.

அன்று எம். எஸ்.ஸுக்கு ஸ்ரீ டி. டி. சங்கரய்யரும், மாஸ்டர் மூர்த்தியும் பக்க வாத்தியம் வாசித்தார்கள். ஸ்ரீ சங்கரய்யர் எதிர்பாராத அளவில் அழகாக வாசித்து விட்டார். பாட்டுக்குப் பெரும் ஒத்தாசை; தனிஆவர்த்தனங்கள் ரொம்பக் கச்சிதம். மூர்த்தியின் வாசிப்பில் மாதுர்யத்துடன் ஜீவ சக்தியும் ததும்பிற்று. கோகலே ஹாலில் பன்னிரண்டு நிமிஷம் தனி ஆவர்த்தனம் வாசித்து முடிவில் கரகோஷமும் அவர் பெற்றுக்கொண்டதை ஒரு அற்புதம் என்றே சொல்லவேண்டும்.

மற்றக் கச்சேரி விமரிசைகளைப்பற்றி அடுத்த இதழில் எழுதுகிறேன்.

## கேட்டுப் பாருங்கள்!

ஜனவரி 1உ. சென்னையில் ஸ்ரீமதி திருப்பத்தூர் செல்லம்மாளும், திருச்சியில் பந்தணைநல்லூர் எஸ். ராஜாவும் பாடுகிறார்கள்.

2உ. மகாராஜபுரம் விசுவநாதய்யர் சென்னையில் ஜமாய்க்கிறார்.

3உ. சென்னையில் ஸ்ரீமதி எஸ். ஜயலக்ஷ்மியின் பாட்டுக்கு ஸ்ரீ எஸ். பாலசந்தர் (பாலரிசியசிருங்கர்) தபலா வாசிக்கிறார்.

அன்று இரவு திருச்சியில் தஞ்சாவூர் நாராயணசாமிப் பிள்ளை தெலுங்கிசை பாடுகிறார்.

4உ. சென்னையில் எம். எம். சிவராஜன் பாட்டும், எஸ். பாலசந்தர் ஸிதார் வாத்தியமும். திருச்சியில் தேசமங்கலம் சுப்பிரமண்ய ஐயர் வீணை.

5உ. சென்னையில் ஸ்ரீ அரியக்குடி ராமானுஜய்யங்காரின் பெரிய கச்சேரி. ரேடியோவில் ஸ்ரீ அய்யங்காரின் பாட்டுக் கேட்டு வெகுநாளாகிறது.

அன்று திருச்சியில் பழனி விஜயலக்ஷ்மியின் பாட்டும் நன்றாயிருக்க வேண்டும்.

6உ. திருச்சியில் பந்தணைநல்லூர் ஜீவாவும், பழைய எஸ். வி. சுப்பையா பாகவதரும் பாடுகிறார்கள்.

8உ. சென்னையில் நீலம்மா கடம்பியின் வீணையும் பாட்டும். திருச்சியில் ஸ்ரீ மலையப்ப சாஸ்திரியின் வாய்ப் பாட்டு.

9உ. சென்னையில் ஆலத்தூர் சகோதரர்கள் சக்கைப்போடு போடுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன். அவர்களோடு பழகிய பக்க வாத்தியங்களைக் கொடுத்தால் அவர்களுடைய லயத் திறமையைக் காட்ட சௌகரியமா யிருக்கும்.

10உ. திருச்சியில் ஸ்ரீ கே. ஏ. ராதா கிருஷ்ணப் பிள்ளையின் முழு நேரக் கச்சேரி நடக்கிறது. இந்தத் தடவை இவர் கச்சேரியை அவசியம் கேட்டுப் பார்க்கவேண்டும்.



# பார்த்திபன் கனவு

## கல்கி




**முப்பத்தோராம் அத்தியாயம்**

**பைரவரும் பூபதியும்**

பொன்னன் சிறிதும் சத்தம் செய்யாமல் மரங்களின் இருண்ட நிழலிலேயே நடந்து சாலையருகில் சென்று ஒரு மரத்தின் மறைவில் நின்றான்.

"சித்திரகுப்தா! எங்கே மகாப்பிரபு?" என்று மாரப்பன் கேட்டது பொன்னன் காதில் விழுந்தது. பிறகு, பின்வரும் சம்பாஷணை நடந்தது.

"மகாப்பிரபு அய்யனார் கோவிலில் இருக்கிறார். என்னை இங்கே இருந்து உங்களுக்கு வழி காட்டி அழைத்து வரும்படி சொன்னார்......ஆமாம்......."

"என்ன ஆமாம்?"

"நீர் மட்டும் தனியாய் வந்தீரே? அவன் எங்கே?"

"எவன்?"

"அவன்தான் பல பெயர் கொண்டவன்......இரத்தின வியாபாரி......வீரஸேனன்......உம்முடைய தாயாதி......ஹிஹிஹி" என்று குள்ளன் கீச்சுக் குரலில் சிரித்தான்.

"அவனா? ஹா ஹா ஹா!......" என்று மாரப்பனும் பெருங் குரலில் சிரித்தான்.

அந்த நள்ளிரவில் அவர்கள் இருவரும் சிரித்த சிரிப்பின் ஒலி பயங்கரமாகத் தொனித்து, மரங்களில் தூங்கிக் கொண்டிருந்த பட்சி ஜாதிகளை எழுப்பி விட்டது. சில பறவைகள் சிறகுகளை அடித்துக் கொண்டன. வேறு சில பறவைகள் தூக்கக் கலக்கத்தில் பீதியடைந்து தீனக் குரலில் சப்தித்தன.

"அவன் பத்திரமாயிருக்கிறான். நீ கவலைப்படாதே. அடே! அன்றைக்கு அந்த இரத்தின வியாபாரிக்கு வழி காட்டிக் கொண்டு போனாயே, அந்த மாதிரிதான் எனக்கும் வழி காட்டு வாயோ?" என்று கூறி மாரப்பன் மறுபடியும் உரத்த குரலில் சிரித்தான். முன்னெப்போதுமில்லாத எக்களிப்பு அவனுடைய குரலில் தொனிப்பது பொன்னனுக்குத் தெரிந்தது.

சித்திரகுப்தன் கூறிய மறுமொழி பொன்னன் காதில் விழவில்லை. மீண்டும் மாரப்பன், "ஓஹோ ஹோ! எனக்கு வழிகாட்டி அழைத்து வரச் சொன்னாரா? எங்கே அழைத்துப் போ, பார்க்கலாம்" என்று சொல்லித் தன் கையிலிருந்த சவுக்கைச் சுடீரென்று ஒரு சொடுக்குச் சொடுக்கினான். சவுக்கின் நுனி சித்ரகுப்தன் மீது சுளீரென்று பட்டது. சவுக்கு சொடுக்கிய சப்தத்தைக் கேட்டதும் குதிரை பிய்த்துக்கொண்டு பாய்ந்து சென்றது.

குள்ளன் ஏதோ முணுமுணுத்துக் கொண்டே பின்னால் விரைவாகச் சென்றான். அவன் இவ்வளவு வேகமாக நடக்க முடியுமென்பதைக் கண்ட பொன்னனுக்கு ஆச்சரியமா

யிருந்தது. அவனைச் சற்று தூரத்தில் பின் தொடர்ந்து ஓட்டமும் நடையுமாகப் பொன்னனும் போனான்.

ஒரு நாழிகை தூரம் சாலையோடு கிழக்கே போன பிறகு, சாலையில் குதிரை நிற்பதும் பக்கத்தில் மாரப்பன் நிற்பதும் தெரிந்தது. சித்திரகுப்தன் மாரப்பனைப் பார்த்து, "ஏன் நிற்க வேண்டும்? போவதுதானே?" என்று கேட்க, "ஏடா காட்டுப் பூனை! இருட்டு ராஜாவாகிய நீ வழி காட்டித்தான் இனிமேல் போக வேண்டும்" என்றான் மாரப்பன்.

"ஆஹா! வழி காட்டுகிறேன். ஆனால் காட்டுப் பூனையிடம் நீ கொஞ்சம் ஜாக்கிரதையாயிரு. விழுந்து புரண்டினாலும் புரண்டி விடும்" என்று சொல்லிவிட்டுக் குள்ளன் சாலைக்கு வலது புறத்தில் புதர்களும் கொடிகளும் மண்டிக் கிடந்தகாட்டில் இறங்கிப் போகலானான்.

பொன்னனுக்கு அவர்கள் எங்கே போகிறார்களென்பது இப்போது சந்தேகமறத் தெரிந்து விட்டது. பாழடைந்த அய்யனார் கோவிலுக்குத் தான் அவர்கள் போகிறார்கள். செடி கொடிகளில் உராய்வதனால் சத்தம் கேட்கக் கூடுமாதலால், பொன்னன் சற்றுப் பின்னால் தங்கி, அவர்கள் போய்க் கால் நாழிகைக்குப் பிறகு தானும் அவ்வழியே சென்றான்.

நள்ளிரவில் அந்தக் காட்டு வழியில் போகும்போது பொன்னனுக்கு மனதில் திகிலாய்த்தானிருந்தது. திகிலை அதிகப்படுத்துவதற்கு ஆந்தைகள் உறுமும் குரலும், நரிகள் ஊளையிடும் குரலும் கேட்டன. செடிக் கிளைகள் அசைந்தாடும்போதும், தரையில் கிடந்த இலைச் சருகுகளில் சரசர வென்று சத்தம் கேட்கும்போதும் பொன்னனுக்கு என்னமோ செய்தது. ஆனாலும் ஏதோ ஒரு முக்கியமான சம்பவம் நடக்கப் போகிறது—முக்கியமான இரகசியத்தைத் தெரிந்து கொள்ளப் போகிறோம்—என்ற ஆவலினால் மனதைத் திடப்படுத்திக் கொண்டு அய்யனார் கோவில் உள்ள திசையை நோக்கிச் சென்றான்.

சற்று நேரத்துக்கெல்லாம் தூரத்தில் ஒரு தீவர்த்தியின் வெளிச்சம் தெரிந்தது. சரி, அதுதான் அய்யனார் கோவில். கிட்ட நெருங்க நெருங்க, கோவிலுக்கு முன்னால் வைத்திருந்த பிரம்மாண்டமான வீரர்களின் சிலைகளும், மண் யானைகளும், குதிரைகளும் தீவர்த்தி வெளிச்சத்தில் கோரமான காட்சியளித்தன. இந்த ஏகாந்தக்காட்டுப் பிரதேசத்தில் உள்ள பாழடைந்த கோவிலுக்குப் பட்டப் பகலில் வந்தபோதே பொன்னனுக்குத் திகிலாயிருந்தது. இப்போது கேட்க வேண்டியதில்லை. கோவிலின் வாசற்படிக் கருகில் பொன்னன் கண்ட காட்சி அவனுடைய திகிலை நூறு மடங்கு அதிகமாக்கிற்று. அங்கே, புராணங்களில் வர்ணித்திருப்பது போன்ற கோர ராட்சத ரூபத்துடன் ஒருவன் கையில் தீவட்டியுடன் நின்று கொண்டிருந்தான். அவனுடைய கோரமான முகத்தில் அப்போது பயபக்தி குடி கொண்டிருந்தது. அவனுக்குப் பக்கத்தில் நெடிய கம்பீர உருவமும் வஜ்ர சரீரமும் கொண்ட மகா கபாலபைரவர் நின்று கொண்டிருந்தார். தீவர்த்தியின் சிவந்த ஒளியில் அவருடைய நெற்றியில் அப்பியிருந்த சந்தனமும் குங்குமமும் இரத்தம் மாதிரி சிவந்து காட்டியது. அவருடைய கழுத்தில் தொங்கிய கபால மாலை பொன்னனுக்குக் குலை நடுக்கத்தை உண்டாக்கிற்று. அவன் நடுங்கிக்கொண்டே கோவிலுக்குப் பின்புறமாகச் சென்று கோவில் வாசற்படிக்கு அருகில் இருந்த பிரம்மாண்டமான வேப்ப மரத்துக்குப் பின்னால் மறைந்துகொண்டு நின்றான். அதே சமயத்தில் சித்திரகுப்தனும் மாரப்பனும் மகா கபால பைரவரின் முன்னால் வந்து நின்றார்கள்.

"மகாப் பிரபோ!" என்று மாரப்பன் கபால பைரவருக்கு நமஸ்கரித்தான்.

"சேனாதிபதி! மாதாவின் ஆக்ஞையை நிறைவேற்றினாயா? பலி எங்கே?" என்று கபால பைரவரின் பேய்க் குரல் கேட்டது.

அந்தக் குரல்—மகேந்திர மண்டபத்தின் வாசலில் அன்றிரவு கேட்ட குரல்—ஏற்கெனவே பயப் பிராந்தியடைந்திருந்த பொன்னனுடைய உடம்பில் மயிர்க் கூச்சலை உண்டாக்கிற்று.

உண்மையிலேயே அது அதிசயமான குரல்தான். ஏதோ காதோடு மெள்ள இரகசியம் பேசுவதுபோல் அடித் தொண்டையி விருந்து, — அதற்கும் கீழே இருதயப் பிரதேசத்திலிருந்து — வருவதுபோல் அந்தக் குரல் தொனித்தது. ஆனாலும், உரத்துப் பேசிய மாரப்பனுடைய குரலைக் காட்டிலும் ஸ்பஷ்டமாக அக் குரல் பொன்னனுடைய செவிகளில் விழுந்தது.

கபால பைரவரின் கேள்விக்கு மாரப்பன், "மகாப் பிரபோ! பலி பத்திரமாயிருக்கிறது" என்றான்.

"எங்கே? ஏன் இவ்விடம் கொண்டு வரவில்லை? காளிமாதாவின் கட்டளையை உதாசீனம் செய்கிறாயா, சேனாதிபதி!"

"இல்லை, இல்லை, மகாப் பிரபோ! இன்று சாயங்காலந்தான் இளவரசனைக் கைப்பற்ற முடிந்தது. உடனே இவ்விடம் கொண்டு வருவதில் பல அபாயங்கள் இருக்கின்றன. பிரபோ! அந்த ஓடக்காரன் இங்கேதான் இருக்கிறான்......"

(இதைக் கேட்டதும் மரத்தின் பின்னால் மறைந்து நின்ற பொன்னனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவனுடைய அடி வயிறு மேலே நெஞ்சுக்கு வந்து விட்டது போலிருந்தது. "ஐயோ! இங்கு ஏன் வந்தோம்?" என்று தவித்தான். மாரப்ப பூபதியின் அடுத்த வார்த்தையினால் அவனுக்குக் கொஞ்சம் தைரியம் பிறந்தது.)

"......அவனைக் கைப்பற்ற முடியவில்லை. சக்கரவர்த்தியின் மகள் குறுக்கே நின்று மறித்தாள். மகாப் பிரபோ! குந்தவி தேவியும் இன்னும் இங்கேதான் இருக்கிறாள். இளவரசனைத் தப்புவிப்பதில் ரொம்பவும் முனைந்திருக்கிறாள். ஆகையால் நாம் ரொம்பவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் காரியம் கெட்டுப் போய்விடும்."

மகா கபால பைரவர் இப்போது ஒரு சிரிப்புச் சிரித்தார். அந்த வேளையில் அந்தப் பயங்கரத் தொனியானது நாலா பக்கமும் பரவி எதிரொலி செய்தபோது, பல நூறு பேய்கள் ஏக காலத்தில் சிரிப்பது போலிருந்தது.

"சேனாதிபதி! நீதானா பேசுகிறாய்? காளிமாதாவின் கட்டளையை நிறைவேற்றப் பயப்படுகிறாயா? அதுவும் ஒரு பெண்பிள்ளைக்கும் ஒரு ஓடக்காரனுக்கும் பயந்தா?"

"இல்லை, ஸ்வாமி, இல்லை. நான் பயப்படுவதெல்லாம் காளிமாதாவின் கைங்கரியத்துக்குப் பங்கம் வந்து விடுமோ என்பதற்குத்தான். மகாப் பிரபோ! தாங்கள் எனக்கு இட்ட கட்டளையை எப்படியும் நிறைவேற்றுவேன். அமாவாசையன்று இரவுக்குள் பலியைக் கொண்டு வந்து சேர்ப்பேன்."

"சேர்க்காவிட்டால்?................" என்றது கபால பைரவரின் கடூரமான குரல்.

"என்னையே மாதாவுக்குப் பலியாக அர்ப்பணம் செய்வேன்."

"வேண்டாம், பூபதி! வேண்டாம். உன்னால் மாதாவுக்கு இன்னும் எவ்வளவோ காரியங்கள் ஆக வேண்டும். இந்தச் செழிப்பான தமிழகத்தில் மகா காளியின் சாம்ராஜ்யம் ஸ்தாபிக்கப்படும்போது நீதான் பிரதம தளகர்த்தனாயிருக்க வேண்டும்."

"மகாப் பிரபுவின் கட்டளையையும் காளிமாதாவின் ஆக்ஞையையும் எப்போதும் சிரமேற் கொள்ளக் காத்திருக்கிறேன்."

"மாரப்பா! மாதாவுக்கு உன்பேரில் பூரண கிருபை இருக்கிறது. மேலும் மேலும் உனக்குப் பெரிய பதவிகளை அளிக்கப் போகிறாள்......சரி! எப்போது எந்த இடத்தில் பலியைக் கொண்டு வந்து சேர்ப்பாய்?"

"மகாப் பிரபோ! அமாவாசையன்று முன் ஜாமத்தில் பராந்தகபுரத்தைத் தாண்டி மகேந்திர மண்டபத்துக்கு அருகில் கொண்டு வந்து சேர்ப்பேன். அங்கே சாலை வழியில் தங்களுடைய ஆட்களை அனுப்பி ஏற்றுக் கொள்ள வேண்டும்."

"ஏன் அந்த வேலையை எனக்குக் கொடுக்கிறாய்?"

"மகாப் பிரபோ! இங்கே உள்ள ஆட்களிடம் எனக்கு முழு நம்பிக்கை இல்லை. சக்கரவர்த்தியின் கட்டளைப் பிரகாரம் இளவரசரைக் காஞ்சிக்கு

அனுப்புவதாகச் சொல்லித்தான் அனுப்பப் போகிறேன். அவர்களைத் தொடர்ந்து கொஞ்சம் பின்னால் நான் வருவேன். தங்களுடைய ஆட்கள் வந்து வழி மறித்து இளவரசரைக் கொண்டு போகவேண்டும். ஆனால், நான் அனுப்பும் ஆட்கள் அவ்வளவு அஸகாய சூரர்களா யிருக்க மாட்டார்கள். தங்களுடைய திருநாமத்தைச் சொன்னால், உடனே கத்திகளைக் கீழே போட்டு விட்டு நமஸ்கரிப்பார்கள்."

"அப்படியே யாகட்டும், சேநாதிபதி! ஆனால், ஜாக்கிரதை! காளிமாதா அடுத்த அமாவாசை இரவில் அவசியம் பலியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள்."

"இன்னொரு விஷயம் தெரிவிக்க வேணும், மகாப் பிரபோ!"

"சீக்கிரம் சொல்; நாங்கள் பொழுது விடிவதற்குள் ஆற்றைத் தாண்ட வேண்டும்."

"இந்த ஓடக்காரப் பொன்னனைச் சில நாளாகக் காணோம். அவன் மகாராணியைத் தேடிக் கொண்டிருக்கிறான் என்று தெரிந்தது. அவனைப் பற்றி அறிய நான் ஆள் விட்டிருந்தேன். நேற்றுத்தான் அவனைப் பற்றித் தகவல் கிடைத்தது. பொன்னனும் இன்னொரு மனிதரும் குதிரை மேல் காட்டாற்றோடு கொல்லிமலைப் பக்கம் போனதாக என்னுடைய ஒற்றன் வந்து சொன்னான்........."

"ஓடக்காரன் இங்கே இருக்கிறான் என்றாயே?"

"ஆமாம்; இன்றைக்குத்தான் இங்கே வந்திருக்கிறான்."

"சரி, ஒன்றும் மோசமில்லை."

"அவனுடன் போன இன்னொரு மனிதன் யார் தெரியுமா, பிரபோ?"

"யார்?"

"தங்களுக்கும் எனக்கும் ஜன்ம விரோதிதான்."

"என்ன? யார்? சீக்கிரம் சொல்!"

"பொய் ஜடாமுடி தரித்த அந்தப் போலிச் சிவனடியார்தான்."

இதைக் கேட்டதும் மகா கபால பைரவரின் முகத்தில் ஏற்பட்ட பயங்கரமான மாறுதலைப் பார்த்துப் பொன்னன் திகைத்துப் போனான். ஏற்கெனவே கோரமா யிருந்த அந்த முகத்தில் இப்போது அளவில்லாத குரோதமும் பயமும் பகைமையும் தோன்றி விகாரப் படுத்தின. அதைப் பார்த்து "ஐயோ!" என்று பொன்னன் அலறிய குரல் நல்ல வேளையாக பயத்தின் மிகுதியால் அவன் தொண்டையிலே நின்று விட்டது.

கபால பைரவரும் சித்ரகுப்தனும் மாரப்ப பூபதியும் அங்கிருந்து கிளம்பிச் சென்றார்கள். தீவர்த்தி பிடித்துக் கொண்டு நின்ற ராட்சதன் அவர்களுக்கெல்லாம் முன்னால் போனான். சற்று நேரத்துக்கெல்லாம் தீவர்த்தி வெளிச்சம் மறைந்தது. கீழ் வானத்திலே இளம் பிறைச் சந்திரன் உதயமாயிற்று.

அவர்கள் போய்க் கொஞ்ச நேரத்துக்குப் பிறகுதான் பொன்னன் அங்கிருந்து கிளம்பினான். அவனுடைய உடம்பு ரொம்பத் தளர்ச்சி யடைந்திருந்தாலும், மனதில் ஒருவித உற்சாகம் ஏற்பட்டிருந்தது. விக்கிரம மகாராஜாவை இந்த நரபலிக்காரர்களிட மிருந்து தப்புவிக்கும் வழி அவனுடைய மனதில் உதயமாகி யிருந்தது. மாரப்பனுடைய தந்திரம் இன்னதென்பது அவனுக்கு இப்போது ஒருவாறு புலப்பட்டது. சிவனடியார் இன்னார் என்பது மாரப்பனுக்குத் தெரியுமாதலால், இளவரசரைக் காஞ்சிக்கு அனுப்புவதில் பிரயோஜன மில்லையென்று மகா கபால பைரவரின் நர பலிக்கு அவரை அனுப்ப எண்ணி யிருக்கிறான். ஆனால், தன் பேரில் குற்றம் ஏற்படாதபடி இந்தக் காரியத்தைத் தந்திரமாகச் செய்ய உத்தேசித்திருக்கிறான். ஆனால் அவனுடைய தந்திரத்துக்கு மாற்றுத் தந்திரம் செய்து விக்கிரம மகாராஜாவை விடுவிக்க வேண்டும். விடுவித்து நேரே மாமல்லபுரம் துறைமுகத்துக்கு அழைத்துப் போக வேண்டும். குந்தவி தேவியின் உதவியைக் கொண்டு இந்தக் காரியத்தைச் செய்து முடிக்க வேண்டும்......இவ்வித மெல்லாம் சிந்தித்துக்கொண்டு பலபல வென்று பொழுது விடியும் தருணத்தில் பொன்னன் தோணித் துறையை அடைந்தான்.

# திண்ணை ரஸாயனம்

சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்

## மூன்றாம் நாள்

சேஷா சாஸ்திரிகள் ஆரம்பித்தார்: "தீக்ஷிதர்வாள்! மயில்துத்தம் தெரியுமோ இல்லையோ, அதில் தாம்பரம் இருப்பது யாராவது சொல்ல முடியுமா?"

**தீ:**—"உண்டு. உண்டு. பழைய வைத்திய புஸ்தகங்களில் அப்படித்தான் சொல்லி யிருப்பதாகக் கேள்வி."

**சே:**—"அதில் கந்தகமும் சேர்ந்திருக்கிறது."

**தீ:**—"இருக்கும். மகா தீட்சணமான பதார்த்தம் மயில்துத்தம்."

**சே:**—"கந்தகமும் செம்பும் இன்னும் வேறு சில தாதுக்களும் சேர்ந்த புணர் பொருள், மயில்துத்தம். இப்போது பையனை ஒரு பரீட்சை பண்ணுகிறேன் பாருங்கள். வெங்கடராமா, பித்தளை ஒரு புணர் பொருளா, கலவையா? சொல்லு பார்க்கலாம்."

**வெங்கடராமன்:**—எனக்குத் தெரியாதா? பித்தளை ஒரு மிக்ஸர்தான், கெமிகல் காம்பவுண்டு அல்ல."

**தீ:**—"என்ன சொல்லுகிறான்? என்னவோ மிச்ரர் என்கிறானே?"

**சே:**—"சரியாகத்தான் சொன்னான். பித்தளை மிக்ஸர் என்கிறான். ஆங்கிலத்தில் மிக்ஸர் என்றால் மிச்ரம் என்று அர்த்தம்."

**தீ:**—"அடடா, சம்ஸ்கிருதத்தைப் போலவே இருக்கிறது! மிச்ரம் என்பதிலிருந்துதான் மிஸ்ச்சர் என்று வைத்துக் கொண்டாப் போலிருக்கிறது. எல்லாத்துக்கும் சம்ஸ்கிருதம் ஆதியோ இல்லையோ?"

**சே:**—"தனி லோகமாகக் காணப்படும் பித்தளை ஒரு கலவைப் பொருள்தான். கற்கண்டைப்போல் பளபளவென்றுள்ள மயில்துத்தப் படிகம் ஒரு புணர் பொருள். இரண்டு தாதுக்களும் கூடி தனி இலக்கணங்கள் கொண்டு ஒரு புதிய பொருள் உண்டாவதுதான் ரசாயனப் புணர்ச்சி. ரசாயனப் புணர்ச்சி வேகம்தான் நெருப்பு."

**தீ:**—"அதற்கென்ன சந்தேகம்?"

**சே:**—"அது எப்படி நீங்கள் சொல்லுகிறீர்கள்?"

**தீ:**—"சம்ஸ்லேஷ வேகம் இருக்கிறதோ இல்லையோ. அது உஷ்ணம் தானே? ஜீவன்களுக்குள்ளே இருப்பது போலப் பொருளுக்கும் ஒரு ரதி வேகம் இருக்கிறதில் என்ன ஆச்சரியம்? அதைத்தானே சொல்லுகிறீர்கள்?"

**சே:**—"நீங்கள் ஆங்கிலம் படித்து ஸையன்ஸ் படித்திருந்தால் எல்லாரையும் தோற்கடித்திருப்பீர்கள்."

**தீ:**—"அதற்குத்தான் நாமெல்லாம் கொடுத்து வைக்க வில்லையே? இந்த உபயோகமற்ற சம்ஸ்கிருதத்தில் போட்டு அத்தியயனம் பண்ணி வைத்தார் எங்கள் தகப்பனார். பத்து வருஷம் படித்தேன். என்ன புருஷார்த்தம்! சாஸ்திரங்கள் எல்லாம் இந்தக் காலத்திற்கு என்ன பிரயோஜனம்?"

**சே:**—"அப்படிச் சொல்லாதீர்கள். நாங்கள் எவ்வளவு படித்தாலும் உங்களுக்குச் சமான மாவோமா? கண்ணாம்புக் கல்லில் தண்ணீர் ஊற்றினால் உஷ்ணம் தோன்றுகிறது. அது ரசாயனப் புணர்ச்சி வேகத்தினால் உண்டாகும் வெப்பம்."

**தீ:**—"குழந்தைக்குக்கூடத் தெரியும்."

**சே:**—"விறகு எரியும்போது கட்டையிலுள்ள பொருள் பிராணவாயுவுடன் புணர்ந்து அந்த ரசாயனப் புணர்ச்சி வேகத்தினால் உஷ்ணம் கிளம்புகிறது. அதுவே விறகு எரிகிறது என்கிறோம்."

**தீ:**—"தலைகீழாகச் சொல்லுகிறீர்களே. விறகு எரிவதால் அல்லவா உஷ்ணம் உண்டாகிறது. உஷ்ணத்தினால் விறகு எரிகிறது என்று சொல்லுகிறீர்களே?"

**சே:**—"இரண்டும் ஒன்றுதான் பாருங்கள். உஷ்ணம் உண்டாவதற்குக் காரணம் காற்றிலுள்ள அனல வாயு விறகிலுள்ள பொருளோடு வேகமாகப் புணர்வதால்தான். இரண்டும் கூடிப் புணராம லிருந்தால் உஷ்ணம் தோன்றாது. அந்த உஷ்ணத் தோற்றமே நெருப்பு."

**தீ:**—"முதலில் நெருப்பு வைத்தால் தானே விறகு எரிய ஆரம்பிக்கிறது?

விறகும் அனலமும் புணர்வதினால்தான் நெருப்பு ஆவதாயிருந்தால் தானாகவே எரியலாமே ?''

சே :—''நான் மறுபடியும் சொல்லு கிறேன், நீங்கள் ஸையன்ஸ் படித்திருந் தீர்களானால் உண்மையில் பெரிய ஸையன்டிஸ்டா யிருக்திருப்பீர்கள்.''

நீ :—''ஸயன்டிஸ்ட் என்றால் என்ன ? ஏதோ வேடிக்கை பண்ணுகிறீர்களாக் கும். விதண்டா வாதம் பண்ணுகிறேன் என்கிறீர்களா ?''

சே :—''இல்லை, நீலகிதர்வாள்! பெரிய பௌதிக ஆராய்ச்சி பண்டிதராக இருந் திருப்பீர்கள் என்றேன். சந்தேகங்கள் தோன்றுவதும் ஐயம் தீர்த்துக் கொள் ளும் வழிகளைத் தேடுவதுமே ஆராய்ச்சி யில் முக்கியமான அம்சம். முதலில் நெருப்பு வைத்தால்தான் விறகு எரியும் என்று நீங்கள் எடுத்துக் காட்டியது சரியான விஷயம். ரசாயனப் புணர்ச் சிக்கு ஒரு துவக்க வெப்பநிலை வேண் டும். சுண்ணாம்புக் கல்லும் தண்ணீரும் சாதாரண உஷ்ண நிலையிலேயே புண ரும். எலுமிச்ச ரசமும் தாம்பரமும் அப்படியே கூடிக் களிம்பாகும். சில பொருள்களுக்குப் புணர்ச்சி ஆர்வம் அதிகம். சில பொருள்களுக்கு அப்படி யில்லை. வேகம் குறைந்த பொருள் களுக்குச் சூடுதரவேண்டும். தந்த வுடன் புணர்ச்சி துவங்கும். பிறகு அந்தப் புணர்ச்சி வெப்பமே தொடர்ச்சியாக ரசாயனப் புணர்ச்சி உண்டாக்கிக் கொண்டு போகும்.

நீ :—'' தெரிந்து போயிற்று, வீடு பற்றி யெரிகிற மாதிரி என்கிறீர்கள்.''

சே :—'' மண்ணெண்ணெய் இருக் கிறது பாருங்கள், விறகைக் காட்டிலும் அதற்கு சம்ஸ்லேஷ வேகம் அதிகம். அனலவாயு இரண்டுக்கும் பொதுவாக இருந்தாலும் மண்ணெண்ணெய் பக் கென்று தீப்பற்றிக் கொள்ளும். விற குக்கு அவ்வளவு வேகம் கிடையாது. மோட்டார் வண்டிக்கு விடுகிற கல் லெண்ணெயானது மண்ணெண்ணெயை விட அதிக ஆத்திரமாக அனலத்தோடு கூடிப் புணரக் காத்திருக்கும்.''

வெங்கடராமன் :—'' என்ன கல்லெண் ணெய் என்கிறீர்களே.''

சே :—'' பெட்ரோல் என்கிறீர்களே அதைத்தான் கல்லெண்ணெய் என் கிறேன்.''

வெங்கடராமன்:—''பெட்ரோலைக் கூடத் தள்ளவேண்டும் என்கிறீர்களே.''

சே :—''பெட்ரோ லெண்ணெய் என்கி றார்கள். அதைக் கேட்கவே எனக்குப் பிடிக்கவில்லை. பெட்ரோலாவது என் னாவது நெய்யாவது. நல்லெண்ணெய், மண்ணெண்ணெய், கல்லெண்ணெய் — நன்றாயிருக்கிறதே. பெட்ரோல் என்கிற பதத்தினும்தாது, கல்தான் அல்லவோ?''

வெங்கடராமன் :—''ஆமாம் ராக்ஆயில் என்று முதலில் சொல்லுவது வழக்க மாய் இருந்ததாம். நீலகிதர்வாள். நீங்கள் கிரோஸினாயில் என்கிறீர்களா, மண்ணெண்ணெய் என்று சொல்லுவது வழக்கமா ?''

நீ:—'' நான் என்னவோ மண்ணெண் ணெய் என்று தான் சொல்லுகிறேன். ஆத்தில் கிர்ஸின் கிர்ஸின் என்றுதான் சொல்லுகிறான்.''

வெங்கடராமன் சிரித்தான்.

சே:—'' விறகு எரியும் விஷயத்தில் சந்தேகம் தீர்ந்ததோ ? விறகு எரிவ தானது அனல சம்ஸ்லேஷ வேகத்தி லிருந்து உண்டான வெப்பத் தோற்றந் தான் என்பது ஏற்பட்டதோ ?''

நீ:—''ஏற்பட்டது, ஏற்பட்டது. சில பொருள்களுக்குக் கோபம் மூட்ட வேண்டும், சில பொருள்களுக்கு எப் போதுமே கோபாவேசம். பொருளுக் கும் பொருளுக்கும் ஆவேச வேகம் ஏற்றக் குறைவு என் கி றீ ர் க ள். இவ்வளவுதானே ?''

சே:—'' ரொம்ப நன்றாகவும் சுருக்க மாகவும் சொன்னீர்கள். குழந்தைகள் தீபாவளியில் கம்பி மத்தாப்புப் பற்ற வைப்பதைப் பார்த்திருக்கிறீர்களோ இல்லையோ? பாருங்கள், இரும்பைப் போன்ற ஒரு உலோகம் முதலில் நெருப்புப் பற்ற வைத்தவுடனே எவ்வ ளவு பிரகாசமாகப் புல் எரிவதுபோல் கலபமாகப் பற்றி எரிகிறது. காற்றி லுள்ள அனலமும் அந்த உலோகமும் புணர்வதில் வெளிச்சமும் வெப்பமும் எவ்வளவு வேகத்துடன் தோன்றுகிறது. அந்த நிகழ்ச்சி அவ்விரண்டு தாதுக் களுக்கிடையிலுள்ள சம்ஸ்லேஷ ஆர்வத் தின் சக்தியே.''

நீ:—'' காற்றில் அனலம் இருக்கிறது என்கிறீர்களே. அது ஏன் நம்மை எல்லாம் தகித்து விடுகிறதில்லை ?''

சே:—'' ஏன், தீ மூட்டிப் பற்ற வைத் தால் எரிந்துதான் போகிறோம். தினமும் நடக்கிற நிகழ்ச்சிதானே.''

நீ:—'' சுவாசம் எடுக்கிறோமே, அது வும் ஒருவிதமான சாவகாச தகனம்தான் என்று சாஸ்திரம் இருக்கிறது. உடலின் இயற்கை வெப்பமும் இதுவே என்றும் சொல்லப் பட்டிருக்கிறது. ஆயுர்வேதத் தில் எல்லாம் சொல்லியிருக்கிறது.''

சே:—"ரொம்ப சரி. அதைத்தான் அடுத்த நாள் பேசலாம் என்று இருக்கிறேன். இப்போது தண்ணீரில் அனலம் மற்றொரு வாயுவுடன் புணர்ந்து நிற்கிறது என்று நான் முதலில் சொன்னேனே அதைப் பற்றிப் பேசலாம்."

தீ:—"தண்ணீரில் அனலம் புணர்ந்து நிற்பதாக விருந்தால் ஏன் அவ்வளவு குளிர்ச்சியாக இருக்கிறது?":

சே:—"நீரக வாயுவுடன் புணர்ந்து நிற்கும் அனலம் வெப்பம் தணிந்து குளிர்ந்து போயிருக்கிறது. நீரக வாயுவை விட அதிகப் புணர்ச்சியார்வம் கொண்ட வேறு பொருள் ஏதேனும் வந்து சேர்ந்தால் அனலம் தண்ணீரிலிருந்து அகன்று அந்தப் பொருளுடன் கலந்து புணர ஆரம்பிக்கும்."

தீ:—"நன்றாகச் சொல்லுகிறீர். அனலம் வேறே ஒரு பொருளைப் பற்றிக் கொண்டு போய் விட்டால் கூடியிருந்த மற்றொரு வாயு, — என்ன பெயர் சொன்னீர்? ஞாபகம் வந்தது — நீரகம், அது என்னவாகிறது?"

சே:—"பேஷ், தீக்ஷிதர்வாள், அனலம் அகல அகல நீரகம் தனிவாயுவாக வெளிப்பட்டுத் துரத்தப்படும். தண்ணீரிலிருந்து நீரக வாயுவை இவ்வாறு வெளிப்படுத்தித்தான் நீரின் ரசாயனத் தன்மையை ஐயம் தீரப் பண்டிதர்கள் கண்டார்கள். ரசாயனத்தை வெறும் திண்ணைப் பேச்சாகப் பேசிச் சொல்லுவதில் ரஸமில்லை. சம்சோதனைக்கு வேண்டிய திராவகங்களும் சாதனங்களும் வைத்துக் கண்கூடாக நிகழ்ச்சிகளைக் காணும்படிச் செய்து காட்டினால் தான் எல்லாம் விளங்கும்."

வெங்கடராமன்:—"எக்ஸ்பெரிமெண்ட் செய்து காட்டவேண்டும் என்கிறீர்கள். தீக்ஷிதர்வாள், நீங்கள் காலேஜில் சேர்ந்து விடுவதே நல்லது."

தீ:—"ஏன் சேரக்கூடாது, சாஸ்திராரம்பத்துக்கு வயது வரம்பு கிடையாது. எத்தனையோ பேர் முப்பது வயதுக்கு மேல் அக்ஷராப்பியாசம் பண்ணிப் பெரிய மேதாவிகளானார்கள் என்று கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. விவாகத்திற்குத்தான் வயதைப் பற்றிக் கேள்வியும் கவலையும் வேண்டும். வெங்கடராமனைப் பற்றிக் கொஞ்சம் யோசியுங்கள். இவனுக்கு எப்போ கலியாணம் செய்வதாக உத்தேசம்?"

(இன்னும் வரும்)

# பெண்கள் உலகம்

"லக்ஷ்மி"

## 3. காமாக்ஷி

என் பெரியம்மா காமாக்ஷி உயரமாகக் கறுப்பாக இருப்பாள். தலையெல்லாம் வெள்ளை வெளேரென்று தும்பை மலரைப்போல் நரைத்துப் போயிருக்கும். தலைமயிரை அலக்ஷியமாக முடிந்துகொண்டு நிற்கும் தோரணையிலிருந்தே யாரும் அது என் பெரியம்மா காமாக்ஷி என்று சுலபத்தில் கண்டு பிடித்து விடலாம்.

எங்கிருந்துதான் புடவை வாங்கித் தருவாரோ பெரியப்பா அவளுக்கு. பல இடங்களில் சாயம் போய்த் திட்டுத் திட்டாக விளங்கும் பட்டுப் புடவையும், முழங்கை வரை கை வைத்த துண்டு ரவிக்கையுமாக வேடிக்கையாகக் காட்சியளிப்பாள் பெரியம்மா.

"ஏண்டா மணி! என்னை அப்படிப் பார்க்கறே? புடவை சாயம் போய் அவலக்ஷணமாக இருக்குன்னுதானே யோசிக்கறே? உன் அழகான பெரியப்பா இருக்காரே, அவர் போன தீபாவளிக்குக் காட்டுப்பட்டியான் கடையிலே போய்க் குடுகுடுன்னு முப்பத்தெட்டு ரூபாயைக் கொட்டி இந்த அழகான சரக்கைப் பிடிச்சுண்டு வந்தார். ஜலத்திலே போட்டதும் புடவை மோர்க் குழம்பாய்ப் போயிடுத்து" என்பாள்.

"எந்தப் புடவை வாங்கித் தந்தாலும் சாயம் போகிற துக்கிரி அதிர்ஷ்டம். அதுக்கு யாரென்ன செய்வா? இருக்கிறதையாவது ஒழுங்கா வச்சுக்கத் தெரியறதா? தலையைப் பாரு! பம்பம்னு பத்ரகாளி மாதிரி" என்று பெரியப்பா வாசல் திண்ணையிலிருந்து கத்துவார்.

"ஏர் ஆயில் போட்டுத் தலையை வாரிப் பின்னித் தொங்க விட்டுண்டு உங்க முன்னாடி வந்து சதிர் பண்ணணுமாக்கும்? இல்லாவிட்டால் வாசல் பந்தல்லே வந்து நிற்கிற சம்பந்தி என்னைப் பார்த்துட்டு, இந்தாத்து சம்பந்தம் வேண்டாமென்று ஓடிப் போயிடுவானாக்கும்? ஏண்டா மணி, இந்த அழகு எனக்கு போராதாடா? நீ சொல்லு!" என்று பெரியம்மா என்னைக் கேட்பாள். நான் விழுந்து விழுந்து சிரிப்பேன்.

பெரியம்மாவின் சில அபூர்வ குணங்கள் என்னை நினைத்த பொழுதெல்லாம் பயித்தியக்காரனைப்போல் சிரிக்க வைக்கின்றன.

மிகவும் பசிக்கும் நேரத்தில் இலையில் காய் கறிகளைப் பரிமாறி விட்டுச் சாதத்தைச் சிப்பலில் வைத்துக்கொண்டு இலையின் முன்னால் நின்றுகொண்டு பேச ஆரம்பித்து விடுவாள்.

"கிட்டுவின் பெண்ணுக்கு உடம்பு ரொம்ப ஜாஸ்தியாய்ப்போய் ரேழியிலே தூக்கிப் போட்டிருக்காம். ஏன்னு உங்களைத்தான் கேக்கறேன். என்னமோ பேந்தப்பேந்த முழிக்கிறீளே?" என்று ஊர் விசாரணைக்கு ஆரம்பித்து விடுவாள்.

"யார் எக்கேடு கெட்டால் எனக்கென்ன? சாதத்தைச் சீக்கிரம் போட்டுத் தொலை" என்று பெரியப்பா சள்ளென்று எரிந்து விழுவார்.

"உங்களுக்கு ஒரு சமாசாரம் வந்து நான் சொல்றேனே. என் புத்தியைச் செருப்பாலேதான் அடிக்கணும். வள்ளு வள்ளுனு விழறத்தைப் பாரு?" என்று பெரியம்மா பெரியப்பாவிற்குச் சுடச்சுடப் பதில் கொடுப்பாள்.

நான் இலை முன்னால் உட்கார்ந்து கொண்டு சாதத்திற்காகத் தவம் இருப்பேன்.

"நீ இன்னிக்குச் சாதம் போடறதாக உத்தேசமா இல்லையா?" என்று பெரியப்பா கோபத்துடன் கேட்பார்.

"அப்பப்பா! நான் ஒரு வார்த்தை பேசறத்துக்குள்ளே மழையிலே உட்காந்திருக்காப்பலே அடிச்சுக்கிறேளே. மணி! ஒரு சமாசாரம் கேளுடா. இந்தத் தெருக் கோடியிலே வைத்தியநாதையர்னு ஒத்தர் இருக்கார். நேத்திக்குக் கூட இங்கே வந்து பெரியப்பா இருக்கரான்னு தேடிட்டுப் போனார். கருப்பா வாட்ட சாட்டமா அப்பளாக் குடுமி வைச்சுண்டிருப்பர். அவருடைய தங்கை



காமாக்ஷி

ஜானகியைப் புக்காத்து மனுஷா பொல்லாத ராக்ஷிகள் படுத்தாத பாடு படுத்தி வச்சுட்டாளாம். இங்கே வந்து இரண்டு மாசமாச்சு. அந்தப் பெண்ணுக்குத் திமுர்திமுர்ன்னு மயக்கம் வந்துடறது. தொப்புனு குடத்தைப் போட்டுண்டு அன்னிக்கிக் குளத்தங் கரையிலே விழுந்துடுத்து. டாக்டர் கோபாலனைக் கூப்பிட்டுக் கையைக் காட்டினதுக்கு அவன் என்னமோ தஸ்புஸ்ஸுனு பேசி விட்டுக் கடைசியிலே என்னமோ இஸ்டீரியா, ஒண்ணும் வேண்டாம், ரெஸ்டு குடுத்தா சரியாப் போயிடும்னு சொல்லிட்டுப் போய்ட்டானும். ஏண்டா மணி! நீ இங்கிலீஷ் படிச்சவனுச்சே. அப்படி ஒரு வியாதி இருக்காடா?" என்று பெரிய பிரசங்கத்திற்குப் பிறகு ஒரு குறுக்குக் கேள்வி கேட்பாள்.

"இல்லாமல் டாக்டர் பொய் சொல்வாரா?" என்பேன் நான்.

"எனக்கென்னவோ இந்த டாக்டர் மேலெல்லாம் நம்பிக்கை கிடையாது. சோலையப்பன் தெரு மாரிமுத்துப் பூசாரியிடம் ஒரு தடவை விபூதி வாங்கிப் போட்டால் அந்தப் பெண்ணுக்குச் சரியாய்ப் போயிடும். நேத்திக்கு அந்த பிராமணன் வந்தப்போ சொல்லலாமான்னு கூடத் தோணித்து. இருந்தாலும் நமக்கென்ன புருஷாளிடம்னு பேசாமல் இருந்துட்டேன். இருக்கட்டும். சாயங்காலம் குப்பிப்பாட்டி இந்தப் பக்கம் வந்தால், விபூதியைப் பத்திச் சொல்றேன். அந்தப் பெண்ணை ஏதாவது பேய் பிசாசுதான் அடிச்சிருக்கும் என்று தோணறது" என்று மேலே முடிவே இன்றிப் பேசிக் கொண்டிருப்பாள் பெரியம்மாள்.

"பேயுமாச்சு பிசாசுமாச்சு! எத்தனை நாழி இப்படி இலை முன்னால் நின்னுண்டு இருப்பாய்? சாதத்தைப் போடு என்றால் என்னமோ லெக்சர் பண்ணுகிறாயே?" என்பார் பெரியப்பா. கோபத்துடன் "ஏண்டா மணி! சாதம் போடறத்துக்குள்ளே கறி கூட்டு எல்லாத்தையும் சாப்பிட்டுட்டியே" என்று என்னைக் கடிந்துகொண்டே சாதத்தை இலையில் பரிமாறுவாள்.

"இப்படி நீ கதை பேசிண்டு நின்றால் பசிக்கிற பசியில் இலையைக்கூடச் சாப்பிட வேண்டியதுதான்" என்று பெரியப்பா ஆத்திரத்துடன் பதிலளிப்பார்.

"நீங்க இலையை மட்டுமா சாப்பிடுவேள்? மனுஷாளைக்கூட பசி சமயத்தில் சாப்பிட்டுடுவேளே?" என்று பரிகாசமாகக் கூறிக்கொண்டே உள்ளே போவாள் பெரியம்மா.

பெரியம்மாவிடம் இன்னொரு விசேஷ குணமுண்டு. ஏதாவது பேசிக்கொண்டே இருக்கும்போது "என்ன நான் சொன்னேன்?" என்று கேட்பாள்.

"எதிர் ஆத்துலே குடியிருக்கிறவருக்கு நாலு குழந்தைகள். ஒண்ணு போன வருஷம் டைபாய்டு ஜுரத்திலே செத்துப் போச்சு. மணி, கேட்டுக்கோடா! என்ன நான் சொன்னேன்?" என்று கதை நடுவில் கேட்டால் "போன வருஷம் ஒன்று டைபாய்டு ஜுரத்துலே செத்துப் போச்சு" என்று நான் திருப்பிச் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் கதை மேலே போகாது. மறுபடியும் முதலிலிருந்து ஆரம்பித்து விடுவாள்.

நாலுநாள் தங்குவதற்குள் எனக்கு மூளை குழம்பி விடும்போல் ஆகிவிட்டது. "மணி! என்ன நான் சொன்னேன்?" என்று பெரியம்மா கேட்க ஆரம்பித்து விட்டால் "பெரியம்மா! கொஞ்சம் இரு! கடைத் தெருப் பக்கம் போய் வருகிறேன்" என்று கூறிவிட்டுக் கம்பி நீட்டி விடுவது வழக்கம்.

பெரியம்மாவுடன் எப்படித்தான் கடந்த முப்பத்தாறு வருஷங்களாகப் பெரியப்பா இல்லறம் நடத்துகிறாரோ என்று நினைத்துக் கொண்டால், எனக்கு என்னையும் அறியாமல் சிரிப்பு வரத்தான் செய்கிறது.


MADE IN ENGLAND
'ऐस्प्रो' की
तीन टिकियां
3
TABLETS
ASPRO
REG. TRADE MARK
"অ্যাসপ্রো"
তিনটি বড়ি
'ஆஸ்ப்ரோ'
3 வில்லைகள்

'ஆஸ்புரோ'
'ஸீல்டைட்'
பொட்டணம்

லக்ஷக்கணக்கான இந்தியர்
களால் மெச்சப்படுகிறது.
நவீன வைத்திய சாஸ்திரத்தால் கண்டுபிடிக்கப்பட்ட



'ஆஸ்புரோ' பயப்படாமல் கொடுக்கக்கூடிய, அதி சீக்கிரம் குணப்படுத்தும், குடும்ப மருந்து என்று, இந்தியா முழுதும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. இருதயத்துக்கோ இரைப்பைக்கோ யாதொரு தீங்கும் அளிக்காது. 'ஆஸ்புரோ' பில்லைகள் ஆரோக்கியமளிக்கும் வண்ணம் கெட்டியாய் 'ஸீல்டைட்' பாக் செய்யப்பட்டிருக்கின்றன. ஆகையால்தான் 'ஆஸ்புரோ' பில்லைகள் ஈரம்படாமல் கார்க்கப்பட்டு உபயோகப்படுத்துகிற காலம் வரையில் மருந்து வீரியம் குறையாமலிருக்கின்றன. மூடப்படாத மாத்திரைகள் சீக்கிரம் குணம்கெட்டு தேகத்துக்குத் தீங்கையும் விளைக்கும். மழலையாயும் பரிசுத்தமாயும் உங்களுக்குக் கிடைப்பது 'ஸீல்டைட் ஆஸ்புரோ': அது ஆக்கும் முறையில் கையாலேயே தீண்டப்படாதது. அணாவுக்கு 3 பில்லைகள். ஜுரத்தைத் தணித்து, நோவை ஆற்றி குணப்படுத்தும் மருந்து வேறொன்றும் இவ்வளவு லகுவாய் கிடைக்காது.

**ஆஸ்புரோ' மலேரியா ஜுரத்தைத் துரத்தியடித்து வலிகளையும் நோவுகளையும் உடனே நிறுத்தும்.**

2 பில்லைகள் மலேரியாவைச் சமனப்படுத்துகிறது.
2 பில்லைகள் 5 நிமிஷத்தில் தலைவலியை நிறுத்துகிறது
2 பில்லைகள் 10 நிமிஷத்தில் ஜுரத்தைக் குறைக்கிறது.
2 பில்லைகள் பல்வலியையும் மண்டைக்குத்தையும் உடனே நிறுத்துகிறது.
2 பில்லைகள் நரம்பு வலிகளை உடனே நிறுத்துகிறது.
2 பில்லைகள் ஆனந்தமான நித்திரையளிக்கும்.
2 பில்லைகள் ஸ்திரீ நோவுகளை நிறுத்தும்.
2 பில்லைகள் கொப்பளித்தால் தொண்டைப் புண் ஆறும்.
2-3 பில்லைகள் ஜலதோஷம் அல்லது இன்புளுவென்ஸாவைத் தொலைத்துவிடும்.
2-4 பில்லைகள் மேல்வாதம், சுரம் பெரிச்சல், வாயுப்பிடிப்பு இவைகளைக் கண்டிக்கும்.

**விலை :- 3 பில்லை 1 அணா. 30 பில்லை 10 அணா. எங்கும் கிடைக்கும்.**



6 வயதுக்கு மேற்பட்ட குழந்தைகள்: 1 மாத்திரை
3-6 வயதுள்ள குழந்தைகள்: ½ மாத்திரை
'ஆஸ்புரோ'வை குழந்தைகளுக்குக்கூட பயப்படாமல் கொடுக்கலாம்

தொண்டைப்புண் என்றால் 'ஆஸ்புரோ'வைக் கொப்பளியுங்கள்.

**டிஸ்ட்டிரிப்யூட்டர்கள்:- ஜெ. எல். மாரிஸன், ஸன் & ஜோன்ஸ் (இந்தியா) லிட்.**

B110-Tm. த. பெ. 1370, சென்னை. டெலிபோன் 3126. மற்றும் கிளை ஆபீசுகள்.

**'ஆஸ்புரோ' இருதயத்துக்கோ வயிற்றுக்கோ தீங்கு செய்யாது**

# கர்வ் பங்கம்

ஆசிரியர்: சரத் சந்திர சட்டர்ஜி] [மொழிபெயர்ப்பு: ஆர். ஷண்முகசுந்தரம்

## அத்தியாயம் 3.

“அண்ணா?”

“யார் விமலாவா? வா, அம்மா, உட்கார்!” என்று கூறிவிட்டு நரேந்திரன் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தான். அவனுடைய முகத்தில் தோன்றிய கவலைக் குறிகளை அவனால் மறைக்க முடியவில்லை.

“வெகு நாளாக உன்னைப் பார்க்க முடியவில்லையே. சௌக்கியந்தானே விமலா?”

விமலாவின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியது. அவள் மெதுவாகக் கட்டிலருகில் வந்து, “அண்ணா! உனக்கு உடம்பு குணமில்லை என்பதை எனக்கு ஏன் சொல்லி அனுப்பக் கூடாது?” என்று கேட்டாள்.

“நோய் ஒன்றும் அவ்வளவு கடுமையாக இல்லை, அம்மா! அந்த மார் வலிதான் கொஞ்சம்.........”

விமலா கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, “கொஞ்சமா? எழுந்து உட்காரவே முடியவில்லையே! டாக்டர் என்ன சொல்கிறார்?” என்றாள்.

“டாக்டரா? டாக்டர் எதற்கு? தானாகவே இது சௌக்யமாகி விடும்.”

“ஐயையோ! டாக்டர்கூட வருவதில்லையா? எத்தனை நாள் ஆச்சு?”

நரேந்திரன் சிறிது சிரித்துவிட்டு, “எத்தனை நாளா? அன்றிலிருந்துதான். ஆறு, ஏழுநாள் ஆகிறது.”

“ஏழுநாள்! அப்போ, மன்னி எல்லாவற்றையும் பார்த்து விட்டுத்தான் போயிருக்கிறாள்!”

“இல்லை, இல்லை! பார்த்து விட்டுப் போகவில்லை. உண்மையாகவே எனக்கு உடம்பு சரியில்லை என்பது அவளுக்குத் தெரியாது போயிருக்கிறது. அவள் போகிறபோது எழுந்து வெளியே உட்கார்ந்து கொண்டிருந்தேன். இல்லை, இல்லை. எவ்வளவு கோபமாகத்தானிருந்தாலும் உன்னால் இப்படிப் போய்விட முடியுமா, அம்மா?”

“மன்னி ஏன் கோபித்துக் கொண்டாள்?”

“இல்லை, கோபம் அல்ல. துக்கம், கஷ்டம், இவைகள்தான்! இங்கே எவ்வளவு சௌகர்யக் குறைவு என்பது தான் உனக்கே தெரியுமே. அவளுக்கு இவைகளைச் சகித்துக் கொண்டு இருக்க முடியாது. அதோடு உடம்பும் அவளுக்கு ரொம்ப மோசமாக இருந்தது. இல்லாவிட்டால் நீங்கள் கோபத்தினாலே நோயாளியைக்கூட கவனியாமல் இருந்து விடுவீர்களா?”

விமலா, கண்ணீரை அடக்கிக்கொண்டு மிகவும் மெதுவாக, “ஏன் முடியாது? இருந்து விடுகிறார்களே. எங்களால் முடியாதது ஒன்றுமேயில்லை. நீ படுக்கையில் விழுகிற வரையிலும் எங்களுக்குத் தெரியவே இல்லை பாரு! போலா! வண்டி கொண்டு வாடா!” என்றாள்.

“கொண்டுவரச் சொல்லி அனுப்பியிருக்கிறேன், அம்மா!”

“இப்போதே போக வேண்டுமா? இன்னும் சாயங்காலம்கூட ஆகவில்லை. இன்னும் கொஞ்ச நேரம் உட்கார்ந்திரு” என்றான் நரேந்திரன்.

“இல்லை, அண்ணா. இருட்டிப்போய் விட்டால் பனி வந்துவிடும். மெதுவாக வந்து வண்டியில் உட்காரு.”

“என்னை அழைத்துப் போகிறாயா? சுத்தப் பைத்தியம்! எனக்கு என்ன வந்துவிட்டது? இவ்வளவு தடபுடல் படுத்துகிறாயே? இம்மாதிரி எப்போதும் வருவது வழக்கம். உடனே சௌக்யமாகிவிடும்.”

“அப்படியே ஆகட்டும். ஆனால் உன்னை இழந்து விட்டால் எனக்கு வேறு அண்ணாவே கிடையாது. இதோ, வண்டியும் வந்து விட்டது. இந்தக் கம்பளியை நன்றாகப் போர்த்துக் கொள். இல்லை அண்ணா. இந்தச் சமயத்தில் நீ என் பார்வையில் இல்லாவிட்டால் எனக்குத் துளிகூட நிம்மதி உண்டாகாது.”

“நீ கூட்டிப்போக விரும்புவாய் என்று தெரிந்திருந்தால், தகவலே கொடுத்திருக்க மாட்டேன்.”

விமலா அண்ணாவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு, "உனக்குத் தெரிந்தது உன்னிடத்திலேயே இருக்கட்டும், அண்ணா! இப்படிச் சொல்ல உனக்கு எப்படித் தான் மனம் வந்ததோ! இம்மாதிரி நிலைமையில் உன்னைத் தனியாக விட்டுப் போக முடியுமா? ரொம்ப நன்றாகச் சொன்னாய்!" என்றாள்.

"சரி வா, போவோம்."

"அண்ணா!"

"ஏன்?"

"இன்று இரவு மன்னிக்கு ஒரு தந்தி கொடுக்கிறேன். நாளைக் காலையிலேயே புறப்பட்டு வரட்டும்."

நரேந்திரன் கவலை அடைந்தான். "வேண்டாம், வேண்டாம். அதற்கு அவசியமே இல்லை" என்றான்.

"ஏன் இல்லை? மிதுனபூர் அவ்வளவு தூரமான ஊர் அல்ல. ஒருதரம் வந்து விட்டுப் போகட்டும்."

"வேண்டாம் விமலா, வேண்டாம். உண்மையிலேயே அவளுக்கு உடம்பு சரியில்லை. கொஞ்ச நாளைக்கு ஓய்வு எடுத்துக் கொள்ளட்டும்."

பிறகு சிறிது பொறுத்து, "விமலா! நான் உனதருகிலிருந்து சௌக்கியமடையா விட்டால், பிறகு நான் ஒருகாலும் சௌக்கிய மடைய மாட்டேன். ஏனம்மா நான் வருவது ககன பாபுக்குத் தெரியுமா?" என்றான்.

"அவர் இன்னும் ஆபீஸிலிருந்தே வரவில்லை."

"அப்புறம்?"

"அப்புறம் என்ன? நீ பயப்பட வேண்டியதில்லை அண்ணா. அவருக்குப் பெரிய இரண்டு கண்களிருக்கின்றன. நாம் போனதும் கண்டு கொள்வார்."

நரேந்திரன் படுக்கையில் படுத்துக் கொண்டு, "விமலா, அப்படியானால் நான் வருவதற்கில்லையே" என்றான்.

விமலா ஆச்சரியத்துடன், "ஏன்?" என்றாள்.

"ககன பாபுவின் சம்மதமின்றி—"

"இப்படிச் செய்தாயானால் நான் மண்டையை உடைத்துக் கொண்டு செத்துப் போவேன். ஒரே வீட்டில் இரண்டு பட்ட அபிப்பிராய மிருக்குமா? நீ ஏன் என்னைக் கேலி செய்கிறாய்?"

"கேலியா செய்கிறேன்!"

"இரண்டுபட்ட அபிப்பிராயம் இருக்காது என்று உறுதியாக நம்புகிறாயா விமலா?"

விமலா அவசியமான துணிகளை எல்லாம் எடுத்துத் தயாராக வைத்திருந்தாள். வெட்கத்தால் தலையை அசைத்து, "இருக்கவே இருக்காது" என்றாள்.

• • •

"அண்ணா, இன்று வலி அவ்வளவு இல்லையல்லவா?"

"கொஞ்சம்கூடக் கிடையாது. இந்த எட்டு நாளாக உங்களுக்கு எத்தனை கஷ்டத்தைக் கொடுத்தேன்! சரி, இன்று நான் போகிறேன், அம்மா!"

"யாருக்கு அண்ணா சிரமப்பட்டேன்? சரி, அண்ணா! இந்தப் பத்துப் பதினைந்து நாளாக மன்னியிடமிருந்து ஒரு கடிதம் கூட வரவில்லையே!"

"ஏன்? வராமல் என்ன? போய்ச் சேர்ந்ததும் ஒரு கடிதம் வந்தது. நேற்றுக்



அவனது பாதத்தை தொட்டு நமஸ்கரித்தாள்.

கூட ஒரு கடிதம் வந்தது. ஆனால் நான்தான் பதில் எழுத முடியவில்லை.''

விமலா முகத்தைச் சுளித்துக்கொண்டு கேட்டுக் கொண்டிருந்தாள்.

நரேந்திரன், "அங்குபோனதிலிருந்து ஏதாவது ஒன்றுபோக ஒன்று உடம்புக்கு வந்து கொண்டிருக்கிறதாம். நேற்று ஜுரமாம். அப்படியிருந்தும் கடிதம் எழுதியிருக்கிறான்!''

"இதனால்தான் இன்று அங்கு பணம் அனுப்பி வைத்தாயா?''

நரேந்திரன் சிறிது வெட்கமடைந்தான். "அவள் கையில் ஒன்றும் கிடையாது. அங்கே ஒரு திருவிழா வருகிறதாம். அது முடிந்ததும் வருவதாக எழுதியிருக்கிறாள். உனக்குக் கடிதம் வரவில்லை போலிருக்கிறது.''

"எனக்குக்கூட நேற்று ஒரு கடிதம் வந்திருக்கிறது.''

"வந்திருக்கிறதா? சரி, அதற்குப் பதில் எழுதும்போது.........''

"நீ பயப்படாதே அண்ணா! உனது உடம்பைப்பற்றி எழுதமாட்டேன். இதை எல்லாம் எழுதி நேரத்தை வீணாக்கமாட்டேன்'' என்று கூறிவிட்டு விமலா அறையிலிருந்து வெளியில் சென்றுவிட்டாள்.

**சா**யங்காலம் நரேந்திரன் மௌனமாக உட்கார்ந்துகொண்டு திறந்திருந்த ஜன்னல் வழியாக ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது விமலா அங்கு வந்து, "தனியாக உட்கார்ந்து கொண்டு என்ன யோசிக்கிறாய் அண்ணா?'' என்றாள்.

நரேந்திரன் அவள் புறம் திரும்பி, "ஒன்றும் யோசிக்கவில்லை அம்மா! இவ்விதமே எப்போதும் நீ சுகமாக வாழவேண்டும் என்று மனதிற்குள்ளாக ஆசீர்வதிக்கிறேன்'' என்றான்.

விமலா அருகில் வந்து அவனது பாதத்தைத் தொட்டு நமஸ்கரித்துவிட்டு நாற்காலியில் உட்கார்ந்தாள்.

"சரி, மத்தியானம் நீ ஏன் ரொம்பக் கோபத்தோடு போனாய்?'' என்று கேட்டான் நரேந்திரன்.

"நான் அநியாயத்தைச் சகிக்கமாட்டேன். நீ ஏன் இவ்வளவு—'' என்று சொல்லி நிறுத்தினாள் விமலா.

"இவ்வளவு என்ன, சொல்லம்மா? இந்துவைக் கவனித்தாயா? என்னால் அவள் என்ன சுகத்தைக் கண்டாள்?''

"சுகப்படுவதற்கும் சக்தி வேண்டும் அண்ணா! அவள் அடைந்த சுகத்தைப் போல வேறு எத்தனை பெண்கள் அடைந்திருக்கிறார்கள்? சுகத்தைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும். இல்லாவிட்டால்...'' அதைப் பேசி முடிப்பதற்குள்ளாகவே விமலா வெட்கத்தால் தலையைக் குனிந்து கொண்டாள். நரேந்திரன் மிகுந்த அன்புடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு, "விமலா, வெட்கமடையாதே அம்மா! உண்மையைச் சொல், நீ எப்போதும் சண்டை யிட்டதே இல்லையா?'' என்றான்.

"அவர் ஒன்றும் சொல்லமாட்டார்.''

நரேந்திரன் புன்முறுவலுடன், "சுகனபாபு உன்னிடம் ஒன்றுமே சொன்னதில்லையா?'' என்றான்.

விமலா தனது அழகிய முகத்தை உயர்த்தி, "உங்களோடு சண்டையிட்டு யார் ஜெயிக்க முடியும்? கடைசியில் கையைக் காலைப் பிடித்து—'' என்று சொல்லிக் கொண்டே வந்தவள் எதையோ பார்த்துவிட்டு "ஐயோ, அங்கு யார் நிற்பது?'' என்றாள்.

---

# தேயாது!



"என்ன ஐயா இது? தலைகீழாக நடக்கிறீர்கள்!''

"நேற்றுத்தான் புதிதாகச் செருப்பு வாங்கினேன். இந்தச் சேற்றிலே வீணாய்ப் போய் விடாதா?''

என்
நிறுத்தி விட்டாய்? சொல்ல வந்ததை முழுதும் சொல்லு! சண்டையிட்டுக் கையைக் காலைப் பிடிப்பது யார்? விஷயத்தைப் பூராவும் சொல்லிவிடு" என்று சொல்லிக் கொண்டே ககன பாபு உள்ளே வந்தார். "போங்கள், ஒட்டுக் கேட்கிற இந்தப் புண்ணிய புருஷருக்கு நான் பதில் சொல்லமாட்டேன்" என்று கோபம் வந்தவள்போல கூறிவிட்டு அங்கிருந்து ஓடிவிட்டாள் விமலா. நரேந்திரன் எழுந்து தலையணையின் உதவியால் நன்ருக உட்கார்ந்தான்.

ககனபாபு, "இப்போது உடம்பு எப்படியிருக்கிறது?" என்று கேட்டார்.

"குணமாகி விட்டது. எனக்குப் போக அனுமதி கொடுங்கள்."

"போவதற்கா? பயப்படாதே யப்பா! இன்னும் நாலைந்து நாளைக்கு இருந்து பார். உனது தங்கை வீட்டில் யார் எத்தனை நாளிருந்தாலும் அத்தனை வருஷம் ஆயுள் விருத்தியாகும், தெரியுமா?"

"எனக்கு இத்தனை நாளாகத் தெரியாது. ஆனல் பூர்ணமாக இதை நம்புகிறேன்."

ககனபாபு, "உண்மையான விஷயத்தை நம்புவதற்கென்ன? வாஸ்தவத்திலேயே நரேந்திர பாபு, உலகத்திலே இம்மாதிரி ரத்தினங்களும் இருக்கத்தான் இருக்கிருர்கள். பாக்கியவான்! 'பாக்யம் பலதி' அந்த ஸ்லோகம் என்ன? இல்லாவிட்டால் என்னைப் போன்ற அபாக்கியவானுக்கு இப்படிப்பட்ட ரத்தினம் கிடைக்குமா? இது கற்பனைக்கும் எட்டாத விஷயம்... வேண்டாமப்பா வேண்டாம். இன்னும் நாலைந்து நாள் இங்கேயே இரு. இந்த மாதிரி வீட்டைவிட்டு சொர்க்கத்திற்குப் போனுல்கூட உனக்கு ஆறுதல் உண்டாகாது. இதை நான் சொல்லி விடுகிறேன்."

விமலா எங்கும் போய்விடவில்லை. பக்கத்து அறையில்தான் நின்று கொண்டிருந்தாள். தன் கண்ணைத் துடைத்துக் கொண்டு, அவர்களிருவரும் உட்கார்ந்த அறைக்குள் எட்டிப் பார்த்தாள். அந்த இருளில் கூட நரேந்திரனது முகம் துக்கத்தால் வெம்பி வெதும்புவது தெரிந்தது.

(தொடரும்)

# அபாய அறிவிப்பு!

— பி.வி.சுப்பிரமணியன் —

கணேச சர்மா அவசரமாக ஊருக்குப் பிரயாணமானார். முதல் நாள் சாயங்காலமே அவர் ஊருக்குப் போக வேண்டியவர்; காஞ்சீபுரத்திலிருந்து ராமச்சந்திர ஐயர் தன்னைப் பார்க்க வந்திருந்ததை உத்தேசித்துப் பயணத்தை அடுத்த நாள் காலைக்கு ஒத்திப் போட்டு வைத்திருந்தார்.

கணேச சர்மா புறப்பட்டுப் போன பிறகு ராமச்சந்திர ஐயரும் மூட்டையைச் சேர்த்து வைத்துக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். சாயங்காலம் ஐந்தரை மணிக்கு முன்னால் காஞ்சீபுரத்துக்கு வண்டி கிடையாதாகையால் அவர் மிகவும் சாவகாசமாக உட்கார்ந்திருந்தார். இப்படி உட்கார்ந்த கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வாசலில் ஒரு வண்டி வந்து நின்ற சப்தம் கேட்டது. யாரோ ஒரு புது மனிதர் குதிரை வண்டியிலிருந்து இறங்கி உள்ளே வந்தார். ராமச்சந்திர ஐயரைக் கண்டதும் நமஸ்காரம் செய்துவிட்டு "சௌக்கியமா?" என்று க்ஷேமம் விசாரித்தார்.

ராமச்சந்திர ஐயர் "சௌக்கியமாகத்தான் இருக்கிறேன்" என்று தெரிவித்துக் கொண்டார்.

கூடத்தில் போடப்பட்டிருந்த பாய் மேல் இரண்டு பேரும் போய் உட்கார்ந்தார்கள். பிறகு புது மனிதர் "நான் ராமேஸ்வரம். அங்கேயே உங்களைப் பற்றி ரொம்பச் சொன்னார்கள். சிநேகத்துக்கு இந்த இடத்தைப்போல் கிடைப்பது கஷ்டம் என்று கேள்விப் பட்டேன்" என்று ஆரம்பித்தார்.

ராமச்சந்திர ஐயருக்குத் திகீரென்றது. "யார்? என்னையா? என்னைச் சிநேகம் பண்ணிக் கொள்ள வேண்டுமென்று ராமேஸ்வரத்திலிருந்தா புறப்பட்டு வருகிறீர்கள்?" என்று கேட்டார்.

"ஆமாம். கணேச சர்மா என்கிறது—?"

ஐயரவர்கள் "ஓஹோ! சர்மாவா? கணேச சர்மா என்கிறது நான் இல்லை. நான் அவருக்குச் சிநேகிதன். சர்மா காலையில்தான் ஊருக்குப் போகிறார். வர இரண்டு நாள் ஆகும்" என்றார் ஐயர். "தங்களுடைய பெயர் என்னவோ?" என்று கேட்டார் வந்தவர்.

"என்னுடைய பெயர் காஞ்சீபுரம் ராமச்சந்திர ஐயர் என்று சொல்வார்கள்."

இதைக் கேட்டதும் ஊரிலிருந்து வந்தவர் தன்னுடைய முகத்தில் சந்தோஷத்தை வருவித்துக்கொண்டு "பேஷ்! பேஷ்! நீங்கள்தானா காஞ்சீபுரம் ராமச்சந்திர ஐயர் என்கிறது? நீங்கள் இங்கே வந்திருக்கிறது கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்த மாதிரி இருக்கிறது. அடாடா! உங்களைப் பற்றியும் ராமேஸ்வரத்தில் என்ன பிரமாதமாகப் பேசிக் கொள்கிறார்கள் என்கிறீர்கள்" என்று கூறினார்.

"ஊரில் இருக்கிறவர்களைப் பற்றிப் பேசுவதைத் தவிர ராமேஸ்வரத்தில் உள்ளவர்களுக்கு வேறு வேலை கிடையாது போயிருக்கிறது" என்றார் ராமச்சந்திர ஐயர்.

கணேச சர்மாவை ஊரிலிருந்து வந்தவர் பார்க்க முடியவில்லை. ஆனால் சர்மாவிடம் ராமச்சந்திர ஐயர் ஒரு வார்த்தை சொன்னால் சர்மா அதைத் தள்ளிவிட மாட்டார்; அவருடைய வார்த்தைக்கு அவ்வளவு மதிப்பு உண்டு என்பதை வந்தவர் தெரிந்து கொண்டிருந்தார். ஆகையால் அவரை உற்சாகப்படுத்தித் தன்னுடைய காரியத்தை எப்படியாவது அவர் மூலமாகச் சாதித்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்தார்.

"உங்கள் கையால் எவ்வளவு தானம், எவ்வளவு தர்மம், எவ்வளவு கல்யாணம் செய்து வைத்திருப்பீர்கள்! என்னைப் போல இருக்கிறவர்களுக்கு ஒரு ஒத்தாசை செய்கிறதையா ஒரு பெரிய காரியமாக நினைக்கப் போகிறீர்கள்!" என்று ஆரம்பித்தார் ராமேஸ்வரக்காரர்.

"கல்யாணமா?" என்று திடுக்கிட்டுக் கேட்டார் ராமச்சந்திர ஐயர்.

"கல்யாணமென்றால் பணம் காசு இந்த ஒத்தாசைக்காக நான் உங்களிடம் வரவில்லை. பகவான் அந்த விஷயத்தில் ஏதோ கொடுத்திருக்கிறார். நீங்கள் செய்யக் கூடிய உபகாரமெல்லாம் ஒரே ஒரு வார்த்தைதான். எனக்காகச் சர்மாவாளிடம் நீங்கள் ஒரு வார்த்தை சொன்னால் போதும். எனக்கு ஒரு பெண் இருக்கிறாள். சர்மாவாளுடைய பையனுக்குமுடிக்க வேணும்



# காவலாளி

துணையுடன் செல்லும் கப்பல்கள் முன்னே செல்லுகையில் சத்துருவின் யுத்தக் கப்பல்களோ, விமானங்களோ, நீர்மூழ்கிகளோ வருகின்றனவா வென்பதைக் கவனித்து நேசதேச யுத்தக் கப்பல்கள் இடைவிடாமல் காவல் புரிந்து வருகின்றன. இந்த யுத்தக் கப்பல்கள்தான் நமது கடற் பாதைகளின் காவலாளிகள். ஏராளமான யுத்த தளவாடங்களை இவைகள்தான் இந்தியாவுக்குப் பத்திரமாகக் கொண்டு வந்து சேர்க்கின்றன.

இதே மாதிரி நாமும் ஒருவகையில் காவலாளிகள்தான். ஏனெனில் வீண் செலவு என்னும் பெரிய உள் நாட்டுச் சத்துருவை எதிர்த்து நாம் காவல் புரிய வேண்டியிருக்கிறது. சத்துரு நடவடிக்கையால் நமது சப்ளைப் பாதைகளுக்கு எவ்வளவு இடைஞ்சல் ஏற்படுமோ அவ்வளவு இடைஞ்சல் சாமான்களை வீணாக்குவதால் யுத்த முயற்சிக்கும் ஏற்படும். நாம் வாங்கும் துணி மணி, சாயம், ஆணி, மரம், தோல் முதலிய சகல சாமான்களும் யுத்த தளவாடங்கள்தான்; படைகளுக்கு அவை ஏராளமாகத் தேவைப்படுகின்றன.

ஆகவே நாம் ஒன்றையும் வீணாக்கலாகாது. வாழ்க்கைக்கு அவசியமானவற்றைத்தான் நாம் வாங்கவேண்டும். இதனால் மீதப்படும் பணத்தை எல்லாவற்றையும்விட பத்திரமான முறையில் முதலீடு செய்வதின்மூலம் அதையும் தேசத்திற்காகப் போராடச் செய்யலாம்.

## டிபென்ஸ் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபிகேட்டுகள்

...அல்லது டிபென்ஸ் லோன்களைத் தவிர

வேறெதையும் வாங்குமுன் — சற்றே யோசியுங்கள்

ஸர்ட்டிபிகேட்டுகள் உங்கள் தபாலாபீஸில் கிடைக்கும் ரூ. 10-க்கு பத்துவருடத்தில் ரூ. 3/9 லாபம் கிடைக்கிறது.

C. P. U. 31 TM.

என்கிறதாக ரொம்ப ஆசை. பகவானே வந்த மாதிரி நீங்கள் வந்திருக்கிறீர்கள். நீங்கள்தான் இருந்து இதை முடித்துக் கொடுக்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே போனார் புது மனுஷர்.

ராமச்சந்திர ஐயர் நடுவில் ஏதோ சொல்ல வாயெடுத்தார். "கணேச சர்மாவின் பிள்ளைக்கு நீங்கள் பெண் கொடுப்பதில் ஒரு ஆட்சேபனையும் இல்லை. ஆனால்—" என்று அவர் சொல்லி முடிப்பதற்குள் ராமேஸ்வரக்காரர் "நீங்கள் ஆனால் என்று சொல்லவே கூடாது. இதனுடைய முழுப் பொறுப்பையும் நீங்கள்தான் ஏற்றுக் கொள்ளவேண்டும். பெண் உங்களுடையது என்றே நினைத்துக் கொள்ளணும்" என்று ராமச்சந்திர ஐயரை மேலே பேசவொட்டாமல் பிரசங்க வெள்ளத்தில் மூழ்க வைத்துத் திணற அடித்து விட்டார்.

மறுபடியும் ராமச்சந்திர ஐயர் பேசுவதற்குப் பகீரதப் பிரயத்தனம் செய்து பார்த்தார். இதைக் கண்டதும் எதிரிலிருந்த ஆசாமி ஆரம்பித்துவிட்டார்: "காலம் ரொம்பக் கெட்டுக் கிடக்கிறது. இந்தக் காலத்தில் ஒரு கல்யாணம் செய்கிறதும் சரி; முன் காலத்தில் பத்துக் கல்யாணங்கள் செய்கிறதும் சரி. அப்படியாகச் சாமான்களின் விலை ஏறிக் கிடக்கிறது. பெண்களை வைத்துக் கொண்டிருக்கிறவர்கள் எல்லோரும் சேர்ந்து யுத்தம் சீக்கிரமாக முடியவேண்டும் என்பதாக யாகங்களும் பிரார்த்தனைகளும் நடத்தினால் கூடத் தேவலை."

இடையில் பேசுவதற்குக் கூடச் சாவகாசம் கொடுக்காமல் மனுஷன் வெளுத்து வாங்குவதைப் பார்த்து ராமச்சந்திர ஐயருக்குத் திகைப்பு உண்டாயிற்று. அவருக்கு விஷயத்தைத் தெளிவு படுத்திவிட வேண்டும் என்று ராமு ஐயர் பேச வாயைத் திறந்தார். ஆனால் சர்மாவைத் தேடிக் கொண்டு வந்த நண்பர் அவ்வளவு கலவரத்தில் அவரைப் பேச விடுகிற வராக இல்லை. "கணேச சர்மாவின் பிள்ளைக்கு" என்று அவர் பேச ஆரம்பித்ததும், "அதெல்லாம் நீங்கள் சொல்லக்கூடாது" என்று புது நண்பரும் இடைமறித்துப் பேசினார். ராமச்சந்திர ஐயருக்குக் கோபம் கோபமாக வந்தது. எரிச்சலுடன் அவர் சொல்லுவதற்கெல்லாம் சரி சரி என்று தலையைப் பலமாக ஆட்டி வைத்தார்.

சுமார் நாலரை மணிக்கு "நான் ரயிலுக்குப் போகவேண்டும். உத்தரவு வாங்கிக் கொள்ளட்டுமா?" என்று சொல்லிக் கொண்டே காஞ்சீபுரம் ராமச்சந்திர ஐயர் எழுந்திருந்தார்.

எதிரில் உட்கார்ந்திருந்தவருக்கு முகத்தில் மறுபடியும் அசடு தட்டியது. மறுபடியும் அதைப் பொருட்படுத்தாதவர் போலச் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு "சரி. ரொம்ப நல்லது. நானும் அரக்கோணம் வரையில் போக வேண்டியிருக்கிறது. போய் விட்டுக் காஞ்சீபுரம் வருகிறேன். பிறகு இரண்டு பேருமாக வந்து சர்மா அவர்களைப் பார்க்கலாம்" என்று சொல்லிக் கொண்டே அவரும் எழுந்திருந்தார்.

முதலில் அரக்கோணம் போகும் ரயில்தான் புறப்பட்டது. ரயில் கிளம்பும்போது கூட "ரொம்ப ஞாபகம் வைத்துக் கொள்ளணும். பெண் உங்கள் பெண்தான்" என்று புறப்படும் ரயிலிலிருந்தே கத்தினார். ராமேஸ்வரம் மனுஷர்.

அதற்கு ராமச்சந்திர ஐயரும் "ஆமாம். அதைச் சொல்லமுடியாமல் தான் இத்தனை நேரமும் என் வாயை அடைத்து விட்டீர். என் பெண்ணுக்கும் கணேச சர்மாவின் பிள்ளைக்கும் கல்யாணம் நடத்துவதாய் நேற்று ராத்திரி தான் நிச்சயம் செய்யப்பட்டிருக்கிறது? தாங்கள் சஹ குடும்ப சமேதராய் நாலு நாள் முன்னதாகவே வந்திருந்து முகூர்த்தத்தை நடத்தி வைத்துத் தம்பதிகளையும் ஆசீர்வதிக்க வேணுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று இரைந்தார்.

ரயிலில் போனவர் அபாய அறிவிப்புச் சங்கிலியைப் பிடித்து இழுத்தாரா என்பது தெரியவில்லை.

# வெஜிடபில் கதம்ப ஊறுகாய்




★

வெள்ளரிக்காய், இஞ்சி, பாவக்காய், கீரைத்தண்டு, வாழைத்தண்டு, கத்தரிக்காய், பச்சை மிளகாய், பச்சை மிளகு - சொல்லும்போதே வாயில் ஜலம் ஊறுகிறது - முதலியவை சேர்த்து கைபடாமல் ஜிஞ்ஜாமிருதமாகத் தயாரிக்கப்பட்டது. வாய்க்கு வெகு ஜோர். உடம்பிற்கு பரம சுகம். இன்றே உங்கள் தேவைக்கு எழுதவும். இரு சைஸ்களில் கிடைக்கும்.

★

## டி. எஸ். ஆர். அண்டு கோ.,

வாஸனா திரவிய வியாபாரிகள்,

கும்பகோணம்.

மதராஸ் சோல் ஏஜெண்டுகள் :

மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்

பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

ஸ்டாக்கிஸ்டுகள் :

சுவாமிநாதய்யர் அண்டு சன்ஸ்.,

புதுக்கோட்டை

சாரதா ஸ்டோர்ஸ்

காரைக்குடி

# கர்நாடக சங்கீத வித்வான்கள்

~ ஆலமங்கலம் வைத்தியநாத பாகவதர் ~

## 23. துகாராமப்பா (தஞ்சை) மிருதங்கம்

தஞ்சைமா நகரில் விளங்கின பிரசித்தி பெற்ற மிருதங்க வித்வான் இவர். பால்ய முதல் அசாத்தியமாக அசுர சாதகம் செய்து உயர்ந்த யோக்யதையை அடைந்தவர். வருஷத்துக்கு ஒரு முறை எந்த விதமான சிரமம் இருந்தாலும் பண்டரிபுரம் போய்ப் பாண்டுரங்கனைத் தரிசனம் செய்து வருவது என்ற விரதத்துடனிருந்த "விட்டல்" என்கிற ஒரு மகானுடைய குமாரர் இவர். இவருடைய பிதாவின் அனுக்கிரஹம்தான் இவர் அடைந்த கியாதிக்கும் யோக்யதைக்கும் காரணம். பாட்டிற்கும் வீணை முதலான வாத்தியங்களுக்கும், ஒற்றுமையாய் வாசித்துத் தம்மையும் கச்சேரி செய்கிறவர்களையும் கனப்படுத்துவதில் இவருக்குச் சமானம் இவரே. இவரைக் காட்டிலும் ஞானத்தில் மட்டமானவர்கள் கச்சேரி செய்தாலும், அவரை இவருடைய வாத்திய ஒத்தாசையினால் உயர்ந்த ஞானஸ்தர் மாதிரி செய்துவிடுவார்.

மகாவைத்தியனாதய்யர் முதல் ரொம்பவும் சாமான்யமாய்க் கச்சேரி செய்கிறவர்கள் பரியந்தம் உள்ள வித்வான்கள் இவரைப் பக்க வாத்தியமாக அடைவதில் ரொம்பவும் பிரியப்படுவார்கள். ஏனென்றால் வித்வான்களுக்கு இடைஞ்சலில்லாமல் பாட்டை வெகு போஷாக்குப் பண்ணி வாசித்துத் தாமும் பெயரை வாங்கக் கூடியவர்! தவிர இவர் வாத்யத்தின் தொப்பியில் "குமுகி" பேசின நாதத்திற்குச் சமானமாய் மற்றவர்கள் எவ்வளவு சாதகம் செய்தும் இவரைப் போல் வாசிக்க முடியவில்லை. அத்துடன் இவர் தம்முடைய இடது கையைத் தொப்பியில் வைத்துக் "கும்காரம்" கொடுப்பதற்கு முன்னும் பின்னும் தள்ளும் போதும், இழுக்கும் போதும், பரிபூர்ண நாதம் உண்டாகி ஜனங்களை பிரமிக்கச் செய்யும். ஏனென்றால் "கும்கார"த்திற்குக் கையை முன் தள்ளி நாதம் உண்டாக்குவது சகஜம். இழுக்கும்போது நாதம் உண்டாக்குவது என்பது ரொம்பவும் துர்லபம். மிருதங்கத்தில் வலந்தரை என்ன சுருதியோ அதற்குக் கீழ் பஞ்சமமாவது அல்லது மந்தரமாவது தொப்பி யிருக்க வேண்டிய மர்மத்தைச் செம்மையாய்த் தெரிந்த இவர் அவ்விதமே செய்து கொண்டு வாசிப்பார். வாசித்துக்கொண்டு வருங்காலத்தில் மிருதங்கத்தினுடைய சுருதியானது சற்று ஏறக்குறையக் கசகினால், அதற்காக மெனக்கட்டு மிருதங்கத்தைப் பாட்டின் மத்தியில் சுருதி பண்ணிக் கச்சேரியைக் கெடுக்காமல், இவர் தொப்பி, வலந்தரையினுடைய பலத்தினால் பிக்கட்டு இல்லாமல் வாசித்து விடுவார்.

வடதேசத்து பாவா ஸம்பிரதாயப்படி கதை செய்கிறவர்களுடைய மஹாராஷ்ட்ர தாட்டிகளுக்கு இவர் வாசித்த தினுசும், கர்னாடக வித்வான்கள் கச்சேரிகளுக்கு வாசித்த தினுசும் தனித்தனியாய்ச் சம்பிரதாயத்தை அனுசரித்து விளங்கும். இவருக்குத் தனி ஆவர்த்தம் கொடுத்தால், அதை வெகு சுருக்கமாய் வாசித்து அதற்குள் ஜனங்களை மோகிக்கச் செய்துவிடுவார். இவருடைய வாத்தியத்தைப் பக்க வாத்தியமாக அடைகிற விஷயத்தில். மகா வைத்தியனாதய்யர் அவர்களும், பட்டணம் சுப்ரமணிய ஐயரவர்களும் எல்லையில்லாத திருப்தியும் மகிழ்ச்சியும் அடைவார்கள்.

இவருடைய வாத்தியத்தைக் கேட்டுத்தான் மிருதங்கம் தக்ஷிணாமூர்த்திப் பிள்ளை, அழகநம்பியாப் பிள்ளை முதலான பெரிய வித்வான்கள் இவருடைய மார்க்கத்தை அனுசரித்து விசேஷ கியாதியை அடைந்தார்கள். இவரைத் தொப்பி துகாராமப்பா என்று சொல்வதுண்டு. நாராயண ஸ்வாமி அப்பா அவர்களுக்கும் இவருக்கும் தாரதம்யம் பேசுங்கால், மகா வைத்தியனாதய்யர் அவர்களுக்கும் பட்டணம் சுப்ரமணிய ஐயரவர்களுக்கும் என்ன தாரதம்யம் சொல்லலாமோ அதைத்தான் கூற வேண்டும்.

வில்லினையொத்த புருவம்வளைத்தனை
வேலவா! — அங்கோர்

வெற்புநொறுங்கிப் பொடிப்பொடி
யானது வேலவா!

சொல்லினைத்தேனில் குழைத்துரைப்பாள்
சிறுவள்ளியைக் — கண்டு

சொக்கி மரமென நின்றனை
தென்மலைக் காட்டிலே

கவிச் சித்திரம்—3

—பாரதியார்.






# வேண்டாத விருந்து

[ராஜி]

ஒரு ஊரில் ஒரு நாய்க் குட்டி இருந்தது. அதன் பெயர் ஜில்லி. ஒரு நாள், ஜில்லி, தன்னுடன் விளையாடுவதற்கு யாரும் இல்லையே என்று வீதியைப் பார்த்துக்கொண்டிருந்தது. அப்பொழுது மற்றொரு நாய்க் குட்டி வாயில் ஒரு கூடையை எடுத்துக் கொண்டு அவசரமாக ஓடி வந்தது. அது தன்னுடைய சிநேகிதன் ஜிம்மி என்று தெரிந்ததும், ஜில்லி வழி மறித்து, "ஜிம்மி! ஜிம்மி! எங்கே அவசரமாக ஓடுகிறாய்?" என்று கேட்டது. "எங்க அம்மா கடையில் சாமான் வாங்கிக் கொண்டு வரச் சொன்னாள்" என்றது ஜிம்மி. "இதற்காகவா அவசரப்படுகிறாய்? நாம் இரண்டு பேரும் விளையாடி ரொம்ப நாளாகி விட்டது. கூடையை வைத்து விட்டு வா. இரண்டு பேரும் சிறிது நேரம் விளையாடலாம். பிறகு நானும் உன்னுடன் கடைக்கு வருகிறேன்" என்றது ஜில்லி.

இரண்டு நாய்க் குட்டிகளும் விளையாடின. பளிஞ்சடுகுடு விளையாடின. ஓடிப் பிடிக்கிற விளையாட்டு விளையாடின. பிறகு பச்சைக் குதிரை விளையாட அவை ஆசை கொண்டன. இன்னும் யாராவது சிநேகிதர்கள் வருகிறார்களா என்று பார்த்தன. அப்பொழுது சற்று தூரத்தில் ஒரு முயல் வந்துகொண்டிருந்தது. "அடாடா, நம் சிநேகிதன் நீலம் அல்லவா அது?" என்று சந்தோஷப்பட்டு, "நீலம்! நீலம்! எங்களுடன் விளையாட வா! மணி எங்கே?" என்று கேட்டுக் கொண்டே அதன் அருகில் சென்றன.

நீலத்தினிடம் நெருங்க நெருங்க பக்ஷணத்தின் வாசனை கம்மென்று வீச ஆரம்பித்தது. நீலம் தட்டு நிறையப் பக்ஷணங்களைக் கொண்டு வருவதைப் பார்த்தவுடன் நாய்க் குட்டிகளுக்கு நாக்கில் ஜலம் சொட்டிற்று. சந்தோஷத்தினால் வால்களைத் தடதடவென்று ஆட்டின.

"குஞ்சாலாடு வெகு ஜோர்!" என்றது ஜில்லி. "மைசூர்ப் பாக் வாசனை மூக்கைத் துளைக்கின்றதே!" என்றது ஜிம்மி. இவ்விதம் சொல்லிக்கொண்டு நாய்க் குட்டிகள் நீலத்தைச் சுற்றிச் சுற்றி வந்தன.



அப்போது நீலம், "சிநேகிதர்களே! இந்தப் பக்ஷணங்கள் ஏது தெரியுமா? யாரோ விருந்தாளி வரப்போவதாக எங்கள் வீட்டில் செய்து வைத்திருந்தார்கள். அம்மாவுக்குத் தெரியாமல் நானும் மணியுமாக எடுத்துக் கொண்டு உங்களுக்கும் கொடுக்கலா மென்று

ஓடிவந்தோம். வழியில் ஒரு வீட்டுத் தோட்டத்தை நாங்கள் தாண்டிவர நேர்ந்தது. நான் வெளியே வந்ததும் தோட்டத்தின் வாசற்படிக் கதவைச் சடக்கென்று சாத்திப் பூட்டி விட்டார்கள். பின்னால் வந்த மணி தோட்டத்தில் மாட்டிக் கொண்டது" என்று நீலம் சொல்லிற்று.



"அப்படியானால் இதுதான் நல்ல சமயம். மணி வருவதற்குள் நாம் மூவருமே பக்ஷணங்களைத் தின்று விடலாம்" என்றது ஜில்லி. "அதுதான் சரி" என்றது ஜிம்மி.



இதைக் கேட்ட நீலத்திற்குக் கோபம்வந்தது. "பேராசை பிடித்த நாய்க் குட்டிகளே! என் தம்பியை விட்டுவிட்டா பக்ஷணத்தைத் தின்பது?" என்று கோபித்தது. இரண்டு நாய்க் குட்டிகளும் பயத்தினால் வால்களை வளைத்துக் கொண்டு "இல்லை இல்லை; மணியையும் அழைத்து வரலாம்" என்றன.

பிறகு, மணியை எப்படி அழைத்து வருவது என்று நாய்க் குட்டிகளும் நீலமும் கலந்து யோசித்தன.

"இதோ என்னிடமுள்ள கூடையை ஒரு கயிற்றில் கட்டி, தோட்டச் சுவரின்மீது விட்டெறிவோம். மணி கூடையில் ஜோராக உட்கார்ந்து கொள்ளும். நாம் மூவரும் கூடையை இழுத்தால் மணி நமக்கு மத்தியில் வந்து குதிக்கும்" என்றது ஜிம்மி. இதுதான் சரியான யோசனை என்று தீர்மானித்து அவை மணி அகப்பட்டுக் கொண்டிருந்த தோட்டத்துக்குப் போயின.

அடுத்த நிமிஷம் கூடையில் கயிற்றைக் கட்டிச் சுவருக்கு அப்புறம் எறிந்தது ஜிம்மி. "மணி! கூடையில் ஏறிக்கொள்!" என்று நீலம் கத்திற்று. அடுத்த நிமிஷம் கூடை கனக்கவே, நீலமும் நாய்க் குட்டிகளும் கூடையை இழுக்க ஆரம்பித்தன. "இதென்ன,



கூட இவ்வளவு கனக்கிறதே?" என்றது ஜிம்மி. "மணி என்ன இவ்வளவு கனமா?" என்றது ஜிம்மி. "மணி இவ்வளவு கனம் இல்லை. ஆனால் மணி இன்னும் ஏதாவது தின்பண்டங்கள் சேர்த்து வைத்திருக்கலாம். அதனால் தான் இவ்வளவு கனம்" என்றது நீலம்.

சுவருக்கு மேல் மணியின் காதுகள் தெரிந்தன. "மணி! வா, வா! உனக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறோம்" என்று மூன்றும் கூப்பிட்டன. "இதோ வந்து விட்டேன்" என்றது ஒரு குரல். ஆனால் அது மணியின் குரல் அல்ல. ஒரு பெரிய மந்திக் குரங்கின் குரல். கூடையிலிருந்து அந்தக் குரங்கு 'கொர் கொர்' என்று உறுமிக்கொண்டு குதித்தது. அடுத்த நிமிஷம் நாய்க் குட்டிகளும் நீலமும் ஓட்ட ஓட்டமாக ஓடின. தாயாருக்குத் தெரியாமல் கொண்டு வந்திருந்த பக்ஷணம் யாவும் குரங்கின் வயிற்றிற்குப் போயிற்று.

மணி வேறு வழியாகத் தப்பித்துக் கொண்டு வந்து நீலத்தைப் பார்த்துப் "பட்சணம் எங்கே?" என்று கேட்டது. நீலம் சொன்னதை மணி முதலில் நம்பவில்லை. ஒரு மரத்தின் உச்சிக் கிளையில் உட்கார்ந்து பட்சணம் தின்று கொண்டிருந்த மந்திக் குரங்கைச் சுட்டிக் காட்டிய பிறகுதான் நம்பிற்று.



## மணிக் கதை—2.









நீதி: ஓடுகிற கோழியைத் துரத்தக் கூடாது!

# கம்பர் தரும் காட்சி

[ டி. கே. சிதம்பரநாத முதலியார் ]

## 36. என்ன பிழை செய்தேன் ?

லக்ஷ்மணனுடைய மனக் கொதிப்பு அடங்காது போலிருக்கிறதே என்று எண்ணிச் சமாதானப் படுத்துகிற முறையில், "தாய் தந்தையர் ஏதோ கொஞ்சம் பிசகிவிட்டால் அதற்காக இப்படியெல்லாம் அவர்களைப் பேசலாமா?" என்று ராமன் கேட்டான். தாய்தந்தை என்ற வார்த்தையை ராமன் எடுத்தானோ இல்லையோ, உடனே லக்ஷ்மணன் தன் இதயத்தையே எடுத்து ராமன் கையில் கொடுத்த மாதிரி "தந்தையும் நீதான், கடவுளும் நீதான், வயிற்றில் பெற்ற தாயுமே நீதான்" என்று சொல்லி விட்டான். லக்ஷ்மணனது அன்பு வந்து ராமனது இதயத்தை ஒரே யடியாய்த் தாக்கி விட்டது. ராமன் என்ன செய்வான்? பேச வாய் எழவில்லை. கையினால் லக்ஷ்மணன் வாயை மூடினான்.

சிறிது நேரம் கழித்துத்தான் ராமனுக்குப் பேச முடிந்தது. மிக்க பரிவுடன் "அப்பா, லக்ஷ்மணா, இன்னும் உனக்குக் கோபம் தீரவில்லையே! எப்படித் தீரப் போகிறதோ!" என்று கேட்கிறான்.

**ஆன்றான்ப கர்வான்பின் னர் :**
**'ஐய,இவ் வையமை யல்**
**தோன்றாநெ றிவாழ்து ணைத்**
**தம்முனைப் போர்தொலைத் தோ,**
**சான்றோர்பு கழுந்த வத்**
**தாதையை வாதைகண் டோ,**
**ஈன்றாளை வென்றோ,இ னி**
**இக்கதம் தீர்வ'தென் றான்.**

[குறிப்பு: ஆன்றான் : ஆய்ந்து அமைந்த அறிவுடையவனான ராமன். வையமையல் தோன்றா நெறிவாழ் : ராஜ்ய சம்பத்தமான ஆசை கொஞ்சமும் இல்லாத மனப்பாங்கில் வாழ்கிற; தம்முனை : தமையனான பரதனை; போர் தொலைத்தோ : போரில் வென்றோ; சான்றோர் புகழும் தவத்தாதையை : பெரியோர்களால் மதிக்கப்படும் உயர்ந்த லக்ஷ்யத்தில் வாழுகிற தந்தையை; வாதை கண்டோ : மனசு புண்படச் செய்தோ; ஈன்றாளை வென்றோ: கைகேயியாகிய தாயைப் போரில் வென்றோ; இக்கதம் தீர்வது: இந்தக் கோபம் உன்னை விட்டுப் போவது.]

இந்த விதமாக எதிர் வார்த்தை சொல்ல முடியாதபடி பேசி விட்டான் ராமன். ஆனாலும் லக்ஷ்மணனுக்குப் பதில் சொல்லாமல் இருக்கமுடியவில்லை. "தம்பியாவது தம்பி! 'லக்ஷ்மணனும் ராமனுக்குத் துரோகிதான்' என்று நானை என்னுடைய பகைவர்கள் சொல்லப் போகிறார்கள். அப்படிச் சொல்லுகிற சொல்லை நான் தடுக்க முடியுமா? முடியாது. ஆயுள் நான் முழுதும் அந்தப் பழியை நான் சுமந்து தீர வேண்டியதுதான். நான் கோபித்துக் கொண்டால் என்ன செய்யக் கிடக்கிறது?" என்று கசந்து சொல்கிறான்.

**செல்லும்சொல் வல்லான்எ திர்,**
**தம்பியும் : 'தெவ்வர்தூற் றும்**
**சொல்லும்சு மந்தேன்,இ ரு**
**தோள்எனச் சோம்பிஓங் கும்**
**கல்லும்சு மந்தேன்,க ணைப்**
**புட்டிலும் கட்டமைந் த**
**வில்லும்சு மக்கப்பி றந்**
**தேன்,வெகுண் (டு) என்னை?' என்**
**றான்.**

[செல்லும் சொல் வல்லான் : மனதில் ஏறும்படியாகப் பேசவல்ல ராமன்; எதிர், தம்பியும் : பதில் வார்த்தையாக லக்ஷ்மணனும்; தெவ்வர் தூற்றும் சொல் : பகைவர் பழித்துச் சொல்லும் சொல்; இரு தோள் எனச் சோம்பி ஓங்கும் கல்லும் : (என்னுடைய இரு தோள்களும் உணர்ச்சியற்ற வெறும் கல்லுகள்தான். உணர்ச்சி என்பது ஒன்று இருந்தால் இப்படிச் சும்மா சோம்பியா இருக்கும்? எதிர்களை இந்த க்ஷணமே நாசம் செய்திருக்க வேண்டாமா? அதுதான் செய்யவில்லையே); சுமக்கப் பிறந்தேன் : வீரச் செயலுக்காக அவைகளை உபயோகிக்கப் பிறக்க வில்லையே! வெகுண்டு என்னை : கோபித்துப் பிரயோசனம் என்ன இருக்கிறது?]

இவ்வளவு விவாதமும் தெருச் சந்தியில் ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் நடந்தது. ஒரு வகையாய் முடிந்தது. இருவரும் சுமித்திரையின் மாளிகைக்குப் போகிறார்கள். ராமன் சுமித்திரையிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே வருகிறான். லக்ஷ்மணனும் பக்கத்தில் வருகிறான். எப்படி வருகிறான்?

தான்புனை சீரைத்
தம்பி சாத்திட,
தேன்புனை தெரியலான்,
செய்கை நோக்கினன் :
'வான்புனை இசையினாய் !
மறுக்கி லாது, நீ
யான்புகல்(வு) அனையதோர்
உறுதி கேள்' என.

[தான் புனை சீரைத் தம்பி சாத்திட: தான் மரவுரி கட்டிய மாதிரியே லக்ஷ்மணனும் மரவுரி கட்டிக்கொண்டு வருகிறான். தேன்புனை தெரியலான்: வண்டுகள் சூழும் மாலையைச் சூடிய ராமன். செய்கை நோக்கினன்: தம்பியின் செய்கையை நோக்கினன்; வான்புனை இசையினாய்: விண்ணுலகத்தவரும் புகழும்படியான உயர்ந்த பண்புடையவனே; புகல்வு அனையதோர் உறுதி: சொல்லித் தீரவேண்டிய மிகவும் முக்கியமான விஷயத்தை.]

"மூன்று அன்னைமாரும் சக்கரவர்த்தியும் முன் போலில்லை. மிக்க துயரத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள். என்னுடைய ஸ்தானத்தில் நீ இங்கிருந்து அவர்களைத் தேற்ற வேண்டும்" என்று இராமன் வெகு நயமாகப் பேசுகிறான்.

"அன்னையர் அனைவரும்
ஆழி வேந்தனும்
முன்னையர் அல்லர், வெம்
துயரின் மூழ்கினர்
என்னையும் பிரிந்தனர்,
இடர்உ றாவகை
உன்னை நீ என், பொருட்(டு)
உதவு வாய்" என்றான்.

ராமன் இந்த விதமாகச் சொல்லித் தன்னை விலக்குகிறான் என்று எண்ணிவிட்டான் லக்ஷ்மணன். அவ்வளவுதான்; ஒரே பயத்தினால் தோள்கள் நடுங்க உணர்ச்சியற்றவனாய் அப்படியே நின்றுவிடுகிறான். சிறிது நேரம் கழித்து உணர்ச்சி மீண்டும் வந்து பேசுகிறான்.

ஆண்தகை அம்மொழி
பகர, அன்பனும்
தூண்தரு திரள்புயம்
துளங்கத் துண்ணெனா,
மீண்டதோர் உயிர், இடை
விம்ம, விம்முவான்,—
'ஈண்டுனக்(கு) அடியனேன்
பிழைத்த(து) யா(து)?' என்றான்.

[ஆண்தகை அம்மொழி பகர: ராமன் அந்த விதமாகச் சொல்ல. அன்பனும் தூண் தரு திரள்புயம் துளங்கத் துண்ணெனா: லக்ஷ்மணனும் தூணை ஒத்த இரண்டு தோளும் நடுங்க ஒரே பயத்துக்கு உள்ளாய்; மீண்டதோர் உயிர்: போன உயிர் மீண்டதென்று சொல்லும்படி. இடைவிம்ம, விம்முவான்; கொஞ்சம் வெளிவர (உயிர்நான்) சுவாசம் இணைநி விம்முகிறான். ஈண்டு உனக்கு அடியேன் பிழைத்தது: சமீபத்தில் உனக்குத் துரோகமாக நான் செய்தது; யாது: ஏதாவது உண்டா?]

லக்ஷ்மணனுக்கு மேலும் மேலும் தாங்க முடியாதபடி வருத்தம் பொங்கி வருகிறது. என்ன செய்வான்!

"எவ்வளவோ விருத்தி செய்து உன்னுடைய உடைமையாய் இருந்த செல்வத்தை எல்லாம் வேண்டாதது என்று தள்ளிவிட்டாய்: அதைப் போலவே எங்களையும் தள்ளிவிடப் பார்க்கிறாயா!

செய்துடைச் செல்வமோ
யாவும் தீர்ந்(து), எமைக்
கைதுடைத்(து) ஏகவும்
கடவையோ ஐயா?—
நெய்துடைத்(து) அடையலர்
நேய மாதர்கண்
மைதுடைத்(து) உறைபுகும்
வயங்கொள் வேலினாய்!

[கைதுடைத்து ஏகவும்: எங்களது வாசனை கூட ஒட்டக்கூடாது என்று போய்விடவும்; கடவையோ: உன்னுடைய மனம் ஒப்படுமோ? — ராமனுடைய வேல் எப்பேர்ப்பட்டது பார்ப்போம்: முதலில் அதற்கு நெய் துடைப்பார்கள்; பிறகு அது பகை அரசர்களைக் கொல்லும்; அது காரணமாக அவர்களுடைய மனைவியர் கண்ணீரைத் துடைப்பார்கள்; அந்தத் துடைப்பில் கண்ணில் இட்ட மையும் துடைபடும்; இந்த இரண்டு காரியமும் நடந்த பிறகு உறைக்குள் புகும் அந்த வேல்! அடையலர்: பகையரசர்.]

லக்ஷ்மணன் இந்த விதமாகச் சொன்னானோ இல்லையோ, ராமன் அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டான்.

உரைத்தபின் இராமன்ஒன்(று)
உரைக்க நேர்ந்திலன்;
வரைத்தடம் தோளினுன்
வதனம் நோக்கினுன்;
விரைத்தடம் தாமரைக்
கண்ணின் மிக்கநீர்
நிரைத்திடை இடைவிழ,
நெடிது நிற்கின்ருன்.

[வரைத்தடம் தோளினுன் வதனம்: மலை யொத்த தோள் கொண்ட லக்ஷ்மணனது முகத்தை; விரை: மணமுள்ள; தடம்: விசால மான; நிரைத்து: வரிசையாகக் கோத்த மாதிரி. நெடிது: இந்த நிலையில் எவ்வளவு நேரம் நின்ருன் என்பது தெரியாதபடி.]

கம்ப ராமாயணத்தில் தனித் தனியே நாடகப் பண்பு வாய்ந்த பல அற்புத மான கட்டங்கள் இருக்கின்றன. இராம லக்ஷ்மணர்களுக்குள் நடக்கும் சம்வாதம் அத்தகைய கட்டங்களில் ஒன்று. லக்ஷ்மணனுக்கு முதலில் ஆத்திரமும் கோபமும் பிரமாதமாய் வருகின்றன. அவனைச் சாந்தப்படுத்த இராமன் எவ்வளவோ சமாதானங்களை எடுத்துச் சொல்கிருன். ஆனல் அவன் என்ன சொன்னுலும் அதற்கு மேலே லக்ஷ் மணன் ஒன்று சொல்கிருன். அவனு டைய பதில்கள் வெகு சாமர்த்தியமாய்த் தோன்றினுலும், எல்லாம் இருதய உணர்ச்சியி லிருந்து இயற்கையாகப் பொங்கி வரும் பதில்கள்தான். கடைசி யில், இராமன் பலவந்தமாக லக்ஷ்மணன் வாயைப் பொத்தி அவனை நிறுத்த வேண்டியதா யிருக்கிறது.

இராமன் காட்டுக்குப் போகிறது என்று ஏற்பட்டால், தானும் அவனுடன் போகிறது என்பதைப் பற்றி லக்ஷ்மண னுக்கு எவ்வித சந்தேகமும் கிடையாது. இராமனைக் கேட்கவேயில்லை; தானும் ஒரு மர வுரியை உடுத்திக் கொண்டு கிளம்புகிருன். இராமன் "எனக்காக நீ இங்கே இருக்கவேண்டும்" என்று சொன்னதும், லக்ஷ்மணன் ஒரே பதற லாய்ப் பதறி, "நான் உனக்கு என்ன தவறு செய்தேன்? இராஜ்யத்தை விட்டுப் போவது போல் என்னையும் கை துடைத்து விட்டுப் போகவா பார்க் கிருய்?" என்று அலறுகிருன். இராம னுக்கு மேலே பேசத் தோன்றவில்லை.

உணர்ச்சி உச்ச நிலையை அடைந்து விட்டது. ராமனும் லக்ஷ்மணனும் உள் ளம் நெகிழ்ந்த வண்ணமாய் ஒருவரை ஒருவர் பார்த்தபடி ஸ்தம்பித்து நிற் கிருர்கள். இனிப் படுதாவை விட வேண்டியதுதான். படுதாவை எப்படிக் கம்பர் இறக்குகிருர் என்பதை அடுத்த இதழில் பார்க்கலாம்.

---

# மிஞ்சிப் போச்சு!

—விஜி.—

" மிஞ்சிப் போச்சு!" என்றதும், காப்பியில் சர்க்கரையா, காராபூந்தியில் உப்பா என்றெல்லாம் கேட்கத் தோன்றும். அதுதான் இல்லை; இந்தக் கதையில் ஒரு காரியம் மிஞ்சிப் போய் விடுகிறது. அதையுந்தான் சொல்லி விடுகிறேனே: ஒருவனை ஒருத்தி ரொம்ப ரொம்பக் காதலிக்கிறாள்; கடைசியில் கல்யாணம் நடக்காமல் போய் விடுகிறது.—" பூ! இவ்வளவுதானா?" என்று நீங்கள் நினைக்கலாம்.

முதலில் ஒரு விஷயத்தை அவசியம் சொல்லிவிட வேண்டும். இந்தக் கதை ஏதோ ஒரு ஆங்கிலக் கதையின் மொழி பெயர்ப்பு போலத் தோன்றும்—இல்லை; இந்தக் கதை ஏதோ ஒரு ஆங்கிலக் கதையின் மொழி பெயர்ப்பு இல்லை.

இப்படிச் சொல்லிவிடுவது ஒரு விதத்தில் நல்லதாயிருக்கிறது. அநியாயமாகக் கொலைக் குற்றம் சாட்டப்பட்ட ஒருவன், நியாயஸ்தலத்தில் தூக்குத் தண்டனை பெறப்போகும் சமயத்தில், நிஜக் குற்றவாளி வந்து தன் குற்றத்தை ஒப்புக்கொண்டு அவனை விடுதலை செய்ததாகத் தமது கதையில் ஒரு தமிழ்க் கதாசிரியர் எழுதிவிட்டால், சில விமர்சகர்கள், " அது எப்படி தமிழ்க் கதாநாயகர்களிடையே அந்த மாதிரி சம்பவம் நிகழ முடியும்? அதெல்லாம் ஆங்கிலக் கதாநாயகர்களிடையேதானே நிகழக் கூடும்?" என்று கேட்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் இந்தக் கதையில் ஒன்றும் கேட்பதற்கு இடம் இராது!—ஏனெனில் இந்தக் கதை சீமைக் கதை; அதாவது சுத்த விதேசி!

" ராயல் ஹோட்ட"லைப் பற்றி லண்டனுக்குப் போய் வந்தவர்களுக்கெல்லாம் தெரியும். அப்படிப் போய் வராதவர்கள், தங்களுக்கும் தெரிந்ததாக நினைத்துக் கொண்டு மேலே படியுங்கள்:

ஒருநாள் ராபர்ட் அந்த ஹோட்டலில் உட்கார்ந்து கொண்டு மாடு தண்ணீர் குடிக்கிற மாதிரி 'டீ' குடித்துக் கொண்டிருந்தான். அதாவது, தான் உட்கார்ந்திருந்த நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளிப் போட்டுக் கொண்டு, 'டீ'யை 'சாஸரி'ல் ஊற்றி விட்டு, கைகளிரண்டையும் மேஜையின் மீது ஊன்றிக் கொண்டு, வாயை நேரே 'சாஸரி'ல் வைத்துக் குடித்துக் கொண்டிருந்தான்.

இந்தக் காட்சியை அந்த சமயத்தில் அங்கு வந்த லூயி கண்டதும், அவனைப் பார்த்து 'ஹிஹிஹி' என்று சிரித்தாள்.

அவனும் அவளைப் பார்த்து 'ஹொஹ் ஹொஹொ' என்று சிரித்தான்.

" நீர் இந்த மாதிரி 'டீ' குடிப்பது சுத்தக் கர்நாடகமானது!" என்றாள் லூயி.

" அப்படியானால் நாகரிகமானது எந்த மாதிரி?" என்று கேட்டான் ராபர்ட்.

உடனே லூயி ஒரு 'கப் டீ'யை வரவழைத்து 'சாஸரி'ல் ஊற்றிக் கொண்டாள். அவனைப் போலவே அவளும் நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளிப் போட்டு உட்கார்ந்து கொண்டு, முன்னுக்குச் சாய்ந்து கொண்டாள். 'சாஸரி'ல் வாயை வைத்து நாய் மாதிரி நக்கிக் குடித்துக் கொண்டே " இது

---

## பார்த்து விட்டுத்தான்!



கடன் கொடுத்தவர்:—என்ன ஐயா, பார்க்காமலே போகிறீர்களே!

[கடன் வாங்கியவர்:—இல்லையே! உங்களைப் பார்த்து விட்டுத்தான் வேகமாகப் போகிறேன்.

தான் இந்தக் காலத்து நாகரிகம்!" என்றான்.

இதைக் கேட்டதும் ராபர்ட் வாய்க்குள் விழுங்காமல் வைத்திருந்த 'டீ'யையும் மறந்து 'குபுக்'கென்று சிரித்துவிட்டான். எதிரில் உட்கார்ந்திருந்தவர்கள் தங்கள் முகத்தைத் துடைத்துக் கொண்டே அவன்மீது சண்டைக்கு வந்தார்கள்.

"மன்னித்துக் கொள்ளுங்கள்" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டு வெளியே வந்துவிட்டான் ராபர்ட். அவனைப் பின் தொடர்ந்து ஆயியும் வந்துவிட்டாள்.

"நம் கல்யாணத்தைப் பற்றி உன் அப்பாவிடம் சொல்லி விட்டாயா?" என்று ஆயியைப் பார்த்துக் கேட்டான் ராபர்ட் வெளியில் வந்ததும்.

"அவர் உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டாமென்று சொல்கிறார்........."

"ஏன்? என்னைப் பிரம்மசாரியாகவே இருக்கச் சொல்கிறாரா?"

"இல்லை, இல்லை. என்னை உனக்குக் கல்யாணம் பண்ணி வைக்க அவருக்குச் சம்மதமில்லையாம்."

"ஏன்?"

"நீ ஏழை; அதனால்தான்."

இதைக் கேட்டதும் ராபர்ட் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டான். "கவலைப்படாதே; பார்ப்போம்!" என்று சொல்லிவிட்டு ஆயி காரில் ஏறிக் கொண்டு கதவை 'டபக்'கென்று சாத்திக் கொண்டாள்.

இந்த சமயத்தில் அவர்களுக்குள் முதலில் எப்படிப் பரிச்சயம் ஏற்பட்டது என்பதையும் கொஞ்சம் சொல்லிவிட வேண்டும். ஒரு நாள் ஆயி கடற்கரையில் உலாவிக் கொண்டிருந்தபோது, தனது கைக்குட்டையைத் தவறி காற்றில் பறக்க விட்டுவிட்டாள். அந்த சமயத்தில் அங்கு வந்திருந்த ராபர்ட், அந்தக் கைக்குட்டையுடன் தானும் பறந்து, அதைக் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு வந்து அவள் கையில் கொடுத்தான். அதைப் பெற்றுக் கொண்டு அவள் 'தாங்ஸ்' என்றாள். இவனும் பதிலுக்கு 'தாங்ஸ்' என்றான். அவளும் இவனை ஏற இறங்கப் பார்த்தான்; இவனும் அவளை ஏற இறங்கப் பார்த்தான். அவ்வளவுதான்!

ஒரு நாள் ராபர்ட்டுக்கு, அவனுக்குத் தூர பந்துவும் லட்சப் பிரபுவுமான ஒருவரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில், தமக்கு அந்தியகாலம் நெருங்கி விட்டதால், தனது சொத்தை யெல்லாம் ராபர்ட்டுக்கு உயில் எழுதி வைத்திருப்பதாகவும், உயில் பாரிஸ்டர் ஜாக்ஸனிடம் இருப்பதாகவும் அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது. அந்தக் கடிதத்தைக் கண்டதும் ராபர்ட்டுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. அந்த சந்தோஷத்தில் அடுத்த நிமிஷமே 'அவர் இறந்து விட்டார்' என்று வந்த தந்தியைப் பார்த்துங் கூட அவனுக்குக் கவலை ஏற்படவில்லை!

உடனே அந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டு ராயல் ஹோட்டலுக்கு ஓட்டம் ஓட்டமாக ஓடினான் ராபர்ட். அங்கு சென்று ஒரு கப் டீயை வரவழைத்து நின்று கொண்டே குடித்து விட்டு, லூயியின் வீட்டுக்கு ஓடி அவள் தகப்பனாரிடம் தான் திடீரென்று லட்சப் பிரபுவான விந்தையைச் சொல்லி, லூயியைத் தனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கும்படி கேட்பது என்பது அவனுடைய எண்ணம்.

ஹோட்டலின் வாசலுக்குள் நுழையும்போதே, தனக்கு முன்னால் வேறு யாரோ ஒருவனைத் தன்னுடன் அணைத்துக்கொண்டு ஒய்யாரமாக லூயி நடந்து செல்வதை ராபர்ட் பார்த்தான். அவனுக்குப் 'பகீர்' என்றது.

"ஹல்லோ!......" என்றான் தழதழத்த குரலில் ராபர்ட்.

லூயி திரும்பிப் பார்த்தாள். "எங்கே உன்னை இரண்டு நாளாகக் காணுமே!" என்று அலக்ஷியமாகக் கேட்டாள்.

"கொஞ்சம் வேலையாய் ஊருக்குப் போயிருந்தேன்" என்றான் ராபர்ட்.

"எனக்கு நேற்றுத்தான் கல்யாணம் நடந்தது. நீ இல்லாமற் போனாயே!" என்றாள் லூயி.

இதைக் கேட்டதும், தனது கையிலிருந்த கடிதத்தை அவளுக்கு எதிரிலேயே சுக்கு நூறாகக் கிழித்தெறிந்து விட்டு வெறுப்புடன் திரும்பினான் ராபர்ட். அப்பொழுது அவன் காலைத் தொப்பு தொப்பென்று எடுத்து வைத்து நடந்து போனதைப் பார்த்து லூயி தம்பதிகள் சிரித்தது அவன் காதில் எங்கே விழுந்திருக்கப் போகிறது?



# காலக்ஷேபம்

### என்னால் முடியாது

**கணவன் :**—என்டீ. ரிடையர்டு ஆன வாளை யெல்லாம் மறுபடியும் வேலைக்குக் கூப்பிடுகிறாளாம். நான் என்ன பண்ணட்டும்?

**மனைவி :**—என்னால் காய்கறி நறுக்க முடியாது. வேலை வேண்டா மென்று எழுதிப் போட்டுடுங்கோ.

—டி. சீதாராமன்.

* * *

### மிகவும் சௌகரியம்

**ஒருவர்** (ஒரு சினிமா ஆக்டரைப் பார்த்து):— நீர் நடித்த படங்களைப் பார்ப்பதென்றால் எனக்கு அளவற்ற சந்தோஷம்.

**ஆக்டர் :**—ஏன் சார் அப்படி?

**ஒருவர் :**—கூட்டத்தில் இடிபடாமல் சௌகரியமாய் உட்கார்ந்து கொண்டு பார்க்கலாம்.

—வி. ஜயராமன்.

* * *

### புத்திசாலி!

**தகப்பனார் :**—டேய், கிட்டு! சூரியன் சந்திரன் இவை இரண்டில் எது அதிக உபயோகமானது?

**கிட்டு :**—சந்திரன்தான், அப்பா! ஏனென்றால் நமக்கு வெளிச்சம் அவசிய மில்லாத பகலில் சூரியன் வெளிச்சம் தருகிறான். ஆனால் சந்திரன் இருட்டா யிருக்கும் இரவில் வெளிச்சம் தருகிறான்.

ஜி. ராஜாராம்.

* * *

### நியாயமா?

**வீட்டுக்காரர்** (மூட்டையைத் தூக்கிக் கொண்டு மாடிப்படி வழியாக இறங்கும் திருடனை வழிமறித்து):—அந்த மூட்டையைப் அப்படியே கீழே வைத்துவிட்டு சப்தம் போடாமல் வெளியே போய் விடு. இல்லாவிட்டால் மண்டையை பிளந்து விடுவேன்.

**திருடன் :**—சாமி! இது நியாயமா? இதெல்லாம் பக்கத்து வீட்டில் திருடின நகைகள், சாமி!

—சி. ஏ. சுந்தர வடிவேல்.

### அதிகம் வேண்டாம்

**வீட்டுக்காரர்** (வீடு முழுவதையும் கொத்தனுக்குக் காட்டிவிட்டு):—ரிப்பேர் அதிகமாகச் செய்யவேண்டி யிருக்குமோ?

**கொத்தன் :**—அதிகமாக ரிப்பேரொண்ணும் செய்ய வேண்டாங்க. அஸ்திவாரத்தை மட்டும்மாத்தனு முங்க. அது பலமில்லை.

—ஆர். கே. நாராயணன்.

* * *

### பழகிவிடும்!

**ஜோஸ்யர் :**—நீ 36 வயது வரையில் மிகவும் தரித்திரதசையில் இருப்பாய்.

**யுவன் :**—அப்புறம்?

**ஜோஸ்யர் :**—அப்புறம் அது உனக்குப் பழக்கமாய்ப் போய்விடும்.

எஸ். ராமச்சந்திரன்

* * *

### ஜெயிக்குமா?

**நாட்டுப் புறத்தான் :**—ஏஞ் சாமி! கேஸ் நடத்தினால் நம்ம பக்கம் செயிக்குமா?

**வக்கீல் :**—இந்தக் கேஸை எந்தக் கழுதை நடத்தினாலும் ஜெயிக்கும்!

**நாட்டுப் புறத்தான் :**—அதுக்குந் தான் உங்க கிட்டே வந்தேன் சாமி!

வி. ச. முத்தையா.

* * *

---

**ஜோசியர் :**—இப்பொழுதைய கிரகம் உங்களுக்குப் போதாது.

**ஜோசியம் கேட்பவர் :**—ரொம்ப வாஸ்தவந்தான்! வீட்டிலே இடம்



போதவில்லை யென்று அடுத்த மாதம் ஜாகை மாற்றப் போகிறேன்.

—பி. துரைசாமி.

## நட்சத்திர மண்டலம்

### போதனா—நாகையா

● "பகவானே, என்னத்திற்காக மனுஷனைப் படைத்தாய்?" என்ற சந்தேகம் முன்னொரு தடவை ஜனங்களுக்குத் தோன்ற ஆரம்பித்த போது பக்த போதனா நம் நாட்டில் அவதரித்தார். இந்த யுத்த சமயத்தில் மறுபடியும் பகவானைப் பார்த்து நாம் மேற்படி கேள்வியைக் கேட்க ஆரம்பித்திருப்பதினால், பக்த போதனா வெள்ளித் திரையில் மீண்டும் அவதரிக்கும் அவசியம் ஏற்பட்டிருக்கிறது. "தியானத்திற்காகத்தான் கைகள் ஏற்பட்டிருக்கின்றன" என்று பக்த போதனா ஞாபகப் படுத்துவதை நாம் சட்டை செய்யா விட்டாலும் அவர் அகங் கனிந்து அற்புதமாய்ப் பாடும் பாட்டுக்களைக் கேட்ட பிறகாவது பகவத் பக்தியில் ஈடுபடுவோமென்பதில் சந்தேகமில்லை.

### காரைக்காலம்மை—சரஸ்வதி

● கையின் உபயோகத்தை ஒரு பக்தர் மட்டும் சொன்னால் சீக்கிரத்தில் புரியாதென்றுதான் இன்னொரு பக்த மணியும் வெள்ளித் திரையில் தோன்றுகிறார் போலும். தமிழ்நாட்டின் ஸ்திரீ பக்த மணிகளில் தலைசிறந்த காரைக்கால் அம்மையாரை அறியாதார் யார்? மாம்பழத்தின் சுவையை நன்கு அறிந்தவனும், பக்திச் சுவையை அறியாதவனுமான புருஷனுக்கு வாழ்க்கைப்பட்டு அவ்வம்மையார் அடைந்த துன்பங்களைக் கேட்டு மனங் கரையாதவர்தான் எவர்? காரைக்கால் அம்மையார் சிவபிரானைக்காண கைலையங்கிரியின்மேல் தலையால் ஏறிச் சென்றதுதான் கதை. தலையை அவ்விதம் பயன்படுத்த நமக்குத் தைரியம் வராவிட்டாலும், கைகளின் உபயோகத்தையாவது அவ்வம்மையாரிடமிருந்து தெரிந்துகொண்டு உய்யலாமல்லவா?



# வட்ட மேஜை

1 புதுக்கோட்டை
20—12—42

இன்று வெளிவந்த ''கல்கி'' பத்திரிகையில் பனையப்பட்டி வினைதீர்த்தான் செட்டியார் புதிதாக சங்கீத உலகில் பிரவேசித்திருப்பதாகவும் பிரசித்தமான பக்க வாத்தியக்காரர்கள் வாசிப்பார்கள் என்றும் எழுதி யிருக்கிறீர்கள். அவர் சுமார் ஏழு வருடங்களாகப் பிரசித்தமான பக்க வாத்தியக்காரர்களோடு அனேகம் கச்சேரிகள் செய்திருக்கிறார். நீங்கள் எழுதி யிருப்பதின் உட்கருத்தைப் பார்த்தால் அவருடைய வித்வத் தன்மையைக் குறைத்து மதிப்பிடுகிறீர்கள் என்று தெரிகிறது. ஆனால் பரிபூர்ண வித்வத் தன்மையில்லாத பாடகர்களுக்கு பெரிய பக்க வாத்தியக்காரர்கள் வாசித்ததாகத் தெரியவில்லை. இளம் வித்வான்கள் முன்னுக்கு வர வேண்டுமென்று விரும்பும் தாங்களே இவ்விதம் எழுதுவது மிகவும் வியப்பாக இருக்கிறது.

கே. பஞ்சநாதம்.

[ஸ்ரீ வினைதீர்த்தான் செட்டியாரின் வித்வத்துக்கும் நாம் எழுதி யிருந்ததற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. ஸ்ரீ வினைதீர்த்தான் செட்டியார் நமது ஆப்த நண்பர்களில் ஒருவர். அந்த உரிமை பற்றியே மற்றத் தொழிலாளி வித்வான்களைக் குறிப்பிடாமல் அவருடைய பெயரைக் குறிப்பிட்டோம். ஸ்ரீ செட்டியார் ஒரே நாளில் பிரபல வித்வானாகி இருக்க முடியாதல்லவா? பக்க வாத்தியக் காரர்களின் சௌகரியமும் ஆரம்ப காலத்திலேயே (ஏழு வருஷங்களாக) அவருக்குக் கிடைத்ததினால்தானே பிரசித்தியடைய முடிந்தது? — இந்த சௌகரியம் சங்கீதத் துறையில் ஈடுபட்ட பெண்மணிகளுக்கு இல்லை யென்றுதான் குறிப்பிட்டோம். —இதனால், நண்பர் வினைதீர்த்தான் செட்டியாரின் வித்வத்துக்கு ஒரு குறையும் நிச்சயமாக இல்லை. —ஆசிரியர்]

2 தஞ்சை
4—12—42

அ. இ. ரேடியோ நிலையத்தார் தங்களது யோசனைகளை யொட்டியும் பொது ஜன அபிப்பிராயத்தை அநுசரித்தும் சாத்தூர் மணி ஐயர், தஞ்சை நாணு, சி. எஸ். கிருஷ்ணன் முதலிய இளம் வித்வான்கள் விஷயத்தில் ஆதரவு காட்டத் தொடங்கி யுள்ளது நம்பிக்கையையும் மகிழ்ச்சியையும் ஊட்டுகிறது. மேலும் மதுரை மணி ஐயர், ஜி. என். பி. இருவருக்கும் சமீப காலத்தில் சந்தர்ப்பம் அளித்ததும் பாராட்டுதற்குரியது.

ஆயினும் நிகழ்ச்சி அமைப்புகளில் இரண்டு குறைகள் பூர்ண மகிழ்ச்சிக்கு இடமில்லாமல் செய்கின்றன. இளம் வித்வான்களின் கச்சேரி நிகழ்ச்சி விஷயத்தில் ''குறுகிய காலத்தில் அதிக உருப்படிகள்'' பாடவேண்டிய ஒரு குறை இருந்து வருகின்றது. 10 உருப்படிகளும் அதற்குமேலும் (சில பெரிய சரணங்களோடு கூடியவை; சில விஸ்தாரமாகச் சங்கதிகளோடு பாடவேண்டியவை) கொடுக்கப்படும் பொழுது வித்வான்கள் ராக ஆலாபனங்களிலும் ஸ்வரம் பாடுவதிலும் ''சிக்கன முறையை'' அநுசரிக்க வேண்டி யிருக்கிறது. கச்சேரியின் இறுதியில் சில பாடல்களைத் ''தட்டி விட்டு''ச்செல்ல நேரிடுகிறது. நிலையத்தார் பாடல்கள் விஷயத்தில் கொஞ்சம் சிக்கன முறையும் அவகாச விஷயத்தில் கொஞ்சம் தாராள மனப்பான்மையும் கொள்ளவேண்டியது அவசியம்.

—த. ரா. ராஜகோபாலன்.

[ரொம்ப சரியான விஷயம். தாங்கள் குறிப்பிட்ட குறை இருப்பதினால்தான், சமீப காலத்தில் ரேடியோவில் பாடிய இளம் வித்வான்கள் சிலர் புரோகிராமிலிருந்து மாறுபட வேண்டி வந்தது. ரேடியோ நிலையத்தார் கவனிப்பார்களென்று நம்புகிறேன். —ஆசிரியர்]

3 திருச்சி
10—12—42

சென்னை, திருச்சி, இவ்விரு அகில இந்திய ரேடியோ நிலையங்களில், சிறிது காலமாக ஜலதரங்கக் கச்சேரியே நடைபெறவில்லை. என்னே விபரீதம்! எவ்வளவு சிரம சாத்தியத்துடன் கிண்ணங்களில் தண்ணீர் விட்டுச் சங்கீத ஸ்வரஸ்தானங்கள் தவறாது ஒலிக்க, லய சுத்தமாகப் பழகிய ராமனாதபுரம் சுப்பய்யர் போன்ற வித்வான்கள் ஜலதரங்கத்தில் பெயரும், புகழும் பெற்றிருப்பதை நம்மவர் அறியாதவரல்லர். அந்த வாத்தியத்தை மாத்திரம்

ரேடியோ நிலையத்தார் புறக்கணித்திருப்பதின் நியாயம் விளங்கவில்லை.

டி. எஸ். ஜானகி அம்மாள்.

[பீங்கான் கிண்ணங்கள் இப்போதெல்லாம் ரொம்ப விலை இராக்கி என்று கேள்வி. —ஆசிரியர்]

4

பழனி
21—12—42

வந்தனம். தங்கள் டிசம்பர் 20-ம் தேதி "கல்கி" ஒரு தனிச் சிறப்பு அடைந்திருக்கிறது. பெரியாழ்வாரின் கவிச் சித்திரம் என் மனதைக் கொள்ளை கொண்டதுபோல் எல்லார் மனதையும் கொள்ளை கொண்டிருக்க வேண்டும். பாட்டும், சித்திரமும், விடாமல் பார்த்துக் கொண்டிருக்கத் தோன்றுகிறது.

—எஸ். ராமகிருஷ்ணன்.

[இந்த இதழ் கவிச் சித்திரத்தைப் பார்த்துச் 'சொக்கி மரமாக' நின்று விடாதீர்கள்! —ஆசிரியர்]

5

கண்டனூர்
23—12—42

'தமிலன்' எழுதிய 'பதில் தெரியுமா?' என்ற கட்டுரை வெகு அற்புதம். அவர் 'கல்கி' இதழில் முதல் முதலாக எழுதுவதே இவ்வளவு பிரமாதமாக இருந்தால் போகப் போக எப்படி யிருக்கும்?

சிதம்பரம் செட்டியார்.

[வெகு வெகு வெகு அற்புதமா யிருக்கலாம். —ஆசிரியர்]

6

மாம்பலம்
13—12—42

இவ்வருட சென்னை "பைன் ஆர்ட் சொஸைடி"யிலும் சங்கீத வித்வத் சபையிலும் ஸ்ரீமதி டி.கே. பட்டம்மாள் அவர்களின் கச்சேரியை நான் எதிர்பார்த்தேன். ஆனால் சங்கீத வித்வத் சபையில் அவர் கச்சேரி காணப்படவில்லை. சென்ற வருடம் வித்வத் சபையில் டி. கே. பட்டம்மாள் அவர்களின் கச்சேரி நடந்தது தங்களுக்கு ஞாபகம் இருக்கலாம். அச்சமயம் அவர் புரோகிராமுக்கு மாறுதலாகப் பெரும்பாலும் தமிழ்ப் பாட்டுக்கள் பாடி எல்லோரையும் மகிழவைத்தார் என்ற குற்றத்திற்காக இவ்வருடம் அவரது கச்சேரி வித்வத் சபையில் இல்லை போலும். சரோஜினி.

[அப்படித்தான் வதந்தியா யிருக்கிறது. இது உண்மையா யிருந்தால் ஆச்சரியத்துக்கு இடமில்லை. மியூஸிக் அகாடமியார் தமிழ்ப் பாட்டை வெறுக்கிறார்கள் என்பது ஸ்பஷ்டமாய்த் தெரிந்திருக்கிறது. —ஆசிரியர்]

7

ஒழுகினசேரி
23—12—42

"கல்கி"யில் வெளியாகும் "காலக்ஷேப" துணுக்குகளுக்கு நேயர்களிடமிருந்து 'வோட்' எடுத்து, அதன்படி தாங்கள் பரிசளிக்கிறீர்கள். இது சிலாக்கத் தகுந்த விஷயமே; ஆயினும் சில இதழ்களில் வெளியாகும் துணுக்குகள், பரிசளிக்கப்படும் துணுக்குகளை விடச் சற்று நன்றாகவும், வேடிக்கையாகவும் இருக்கின்றன. ஆனால் நேயர்கள் அவைகளுக்கு 'வோட்' செய்ய மறந்து விடுகிறார்கள். ஆகவே, இனிமேல் வெளியாகும் துணுக்குகளை, தாங்களே தெரிந்து எடுத்து, அதற்குப் பரிசளிக்க வேண்டுமென்று, நாங்களும், மற்றும் எங்கள் சங்கத்திலுள்ள கிராமவாசிகளும் தாழ்மையுடன் வேண்டிக் கொள்கிறோம். கே. பத்மனாபன்.

இன்னும் ஏழு பேர்கள்

[தயவு செய்து தங்களைப் போன்ற ரஸிகர்கள் அதிகமாக வோட்டு செய்ய முன்வர வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம். இன்னும் சிலகாலம் பார்த்த பின் நிலைமை சீர்திருந்தா விட்டால், தங்களுடைய யோசனையை ஏற்க வேண்டியதாகும். —ஆசிரியர்]

---

## ரொம்ப சந்தோஷம்!



ஆபீஸ் மானேஜர்:—உங்களை மாதம் 15 ரூ. சம்பளத்தில் குமாஸ்தாவாக நியமித்திருக்கிறேன். நான்கு மாதங்கள் சென்றதும் 25 ரூ. கொடுக்கிறேன்.

வேலைக்கு வந்தவர்:—அப்படியானால் ரொம்ப சந்தோஷம். நான்கு மாதங்கள் கழித்து வேலைக்கு வருகிறேன்.











'அசோகா' பாக்குத் தூள் வாய்க்கு ருசி, மனதுக்கு ரம்யம்.

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.